உ

# வேல் மாறல் மஹா மந்த்ரம்

(உரையுடனும், யந்த்ரப் படத்துடனும்)



[ஸ்ரீ வல்லீ தேவஸேநா ஸமேத ஸ்ரீ திருத்தணிகேசர்]

வெளியிடுவோர்: **வேல் மாறல் மன்றம்**
பொங்கி மஹா ஸரஸ் , எண்-8/21, பொங்கி மடாலயம் தெரு,
நங்கைநல்லூர், சென்னை-600 061.

உரிமை பதிவு) 11-03-2008 (விலை ரூ.40/-

# ஸ்ரீமத் அருணகிரிநாத ஸ்வாமிகள்



(வேல்வகுப்பின் ஆசிரியர்)

உ
ஸ்ரீ பொங்கி க்ருபா

# வேல் மாறல் மஹாமந்த்ரம்

# VEL MAARAL MAHA MANTHRAM

(யந்த்ரத்துடனும், உரையுடனும்) (with Yanthram & Commentary)


வேல் வகுப்பின் ஆசிரியர்:

**ஸ்ரீமத் அருணகிரிநாத ஸ்வாமிகள்**

வேல் மாறலைத் தொகுத்தருளியவர்:

**ஸ்ரீலஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள்**





நூற்பயன் பாடல்கள், உரைகள் எழுதி விரிவாக்கியவர்:

**அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்**



அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகளின்
எட்டாவது ஆராதனை (ஸர்வஜித்–மாசி–சுக்ல பக்ஷ பஞ்சமி) நாளில் வெளியிடுவோர்

வேல் மாறல் மன்றம்

'பொங்கி மஹா ஸரஸ்', 8/21, பொங்கி மடாலயம் தெரு, நங்கைநல்லூர் (தெற்கு),
சென்னை–600 061. தொலைபேசி: 22312473, 9444512781





11.03.2008

(யந்த்ரப் படத்துடன் விலை ரு.40

| | | |
|---|---|---|
| பெயர் | : | வேல் மாறல் மஹாமந்த்ரம் யந்த்ரம் & உரையுடன் |
| தொகுத்தவர் | : | ஸ்ரீலஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு – 1976<br>இரண்டாம் பதிப்பு – 1986<br>மூன்றாம் பதிப்பு – 11-03-2008 |
| வெளியிடுவோர் | : | வேல்மாறல் மன்றம் |
| வெளியீட்டுரிமை | : | வேல்மாறல் மன்றம் |
| அளவு | : | A8 (Dimmy) |
| பக்கங்கள் | : | 56 |
| காகிதம் | : | 90 GSM Maplitho |
| அட்டை | : | 130 GSM Art Paper |
| பொருள் | : | ஆன்மிகம் (கவிதைகள்) |
| விலை | : | Rs.40.00 |
| பிரதிகள் | : | 2500 |
| Laser Typeset & Printed | : | Visual Graphics, ✆ 9841459068 |




கிடைக்குமிடம் :


❖ **வேல்மாறல் மன்றம்**
'பொங்கி மஹா ஸரஸ்'
8/21, பொங்கி மடாலயம் தெரு,
(மாடர்ன் மேல்நிலைப் பள்ளி அருகில்)
நங்கைநல்லூர் (தெற்கு),
சென்னை–600 061.

செயலர் தொலைபேசி: 6546 9373
தலைவர் தொலைபேசி: 2231 2473

உறுப்பினர் ('பொங்கி மஹா ஸரஸ்'):
எஸ்.வி. மஹாதேவன்: 94445 12781

உ

ஸ்ரீ வைஷ்ணவி துணை

# முதற் பதிப்பின் முகவுரை

''ஆடும் பரிவேல் அணிசேவல்'' எனப் பாடும் பணியே பணியா அருள்வாய்!..
என்று கந்தர் அநுபூதியில் முருகவேளை வேண்டிக் கொண்ட ஸ்ரீமத் அருணகிரிநாதர், வேல் வகுப்பு, வேல்வாங்கு வகுப்பு, வேல் விருத்தம் முதலியவற்றையும் பாடி, வேலாயுதத்தைப் புகழ்ந்து பேசியிருக்கிறார். ஆண்டவனது ஆய்தங்களையோ, வாஹநங்களையோ, த்வஜங்களையோ ஓதுதலும் கூட அவனைப் போற்றுதலைப் போலவே ஆகும். மஹா விஷ்ணுவின் ஆய்தங்களுள் ஒன்றான ஸுதர்ஸநச் சக்ரத்திற்கு விஸேஷ ஸ்தோத்ரங்கள் உண்டு. அவரது ஐந்து படைகளுக்கும் ''பஞ்சாய்த ஸ்தோத்ரம்'' ஸம்ஸ்க்ருதத்தில் உண்டு. அவரது வாஹநமாகிய கருடனுக்கும் `கருட பஞ்சகம்' முதலிய ஸ்துத்யங்கள் உண்டு. அதுவே போல் பரமேஸ்வரனுடைய வாஹநமாம் நந்திக்கும் ஸ்தோத்ரங்கள் உண்டு. அவ்வகையில் முருகவேளின் படையாம் வேலாய்தத்துக்கும் அருணை முநிவர் துதிகள் பாடியிருக்கிறார். அந்தத் தொகுதியில் சேர்ந்ததே வேல் வகுப்பு. இஃது, அவர் பாடியுள்ள திருவகுப்புகளுள் மூன்றாவது. உடல் நோயைப் போக்க, `மணி, மந்த்ர, ஔஷதம்', என்பார்கள். அதுபோல, உள்ள நோயையும், உயிர்ப் பிணியையும் ஒழிக்க, மணி வகுப்பு (1. சீர்பாத வகுப்பு), மந்த்ர வகுப்பு (2. தேவேந்த்ர ஸங்க வகுப்பு) ஔஷத வகுப்பு (3. வேல் வகுப்பு) இம் மூன்றையும் அருளிச் செய்திருக்கிறார் அருணை வள்ளலார். உடல் நோய், மநநோய், உயிர் நோய் ஆகிய மூவகைப் பிணிகளுக்கும் உற்ற மருந்தாகி, அவற்றை உடனே தீர்த்தருள வல்ல ஆற்றல் படைத்தது வேல்வகுப்பு என்பர் வள்ளிமலை வள்ளலாராம் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள். அவரே வேல் வகுப்பைக் கொண்டு `வேல்மாறலைத்' தொகுத்தவர் ஆவார். வேல் வகுப்பின் முடிவில் சந்த முநிவர் திருத்தணிகை (ஞான ஶக்திதரனாம் செங்கல்வராய) ப் பெருமானுடைய திருக்கைவேல் என்று தான் குறிப்பிடுகிறார். வள்ளிமலை ஸ்வாமிகளும் திருத்தணியில் தான் 31–12–1917இல் திருப்புகழ்த் திருவிழாவை முதன்முதலில் தொடங்கினார்.

திருவைந்தெழுந்து, திருவாறெழுத்துப் போன்ற மஹா மந்த்ரங்களின் அக்ஷரங்களை ஐங்கோண, அறுகோணச் சக்ரங்களின் கட்டங்கட்குள் அமைய அடைத்து அந்த யந்திரங்களைப் பூஜை பண்ணினால் சிறந்த பலன்கள் கிடைக்கும் என்றும், அம்மாதிரி யந்த்ரங்களும், அந்தச் சக்ரங்களின் அதிதேவதைகளும் வேறு வேறு அன்று ஒன்றே என்றும் மந்த்ர ஶாஸ்த்ரங்களால் உணர்கிறோம். இந்த முறைமையை ஒட்டியே ஸ்ரீலஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள் அவர்கள், அருணகிரியார் அருளிய வேல் வகுப்பின் பதினாறு அடிகளையும் மேலும் கீழும் ஆகவும், முன்னும் பின்னும் ஆகவும் ஏறி இறங்கி வருகிறாற்போல் மாறி மாறி வர அமைத்து (நான்கு மடங்குகளில்) அறுபத்து நான்கு அடிகளாக அமைய வைத்து, அந்தத் தொகுப்பை "வேல் மாறல்" என்று அழைத்தருளினார்கள். இந்த வேல் மாறலைப் பாராயணம் புரியும்போது அதன் பூர்வ பாகம், உத்தர பாகங்கள் போல் அமையும்படி, அருணகிரிநாதர் திருவாக்கினின்றே சிற்சில பாடல்களையும் ஸ்வாமிகள் பொறுக்கி எடுத்து அமைத்துக் கொடுத்து, அங்ஙனமே ஓதுமாறும் வழிவகைகள் செய்துள்ளார்கள். வேல் மாறல் பாராயணத்தில் "திருத்தணியில்" எனத் தொடங்கும் (வேல் வகுப்பின் 16ஆம்) அடி, ஜப எண்ணிக்கையில் 108✪ முறை ஓதப் பெறுகிறது என்பதும் குறிப்பிடத்தக்கது. வேல், ஒரே இடத்தில் ஸ்திரமாக இருந்துவிடாமல், இடம் மாறி, வேறு வேறு ஸ்தாநங்களில் புகுந்து

---

✪ வள்ளிமலை ஸ்வாமிகள் 22–11–1950–இல் மஹா ஸமாதி அடைவதற்கு முன் 1950 ஜூலையில் மிகமிகச் சுருக்கமான அளவில் ஒரு பாராயணப் பதிப்பை வேல்மாறலுடன் வெளியிட்டார்கள். R. விச்வநாதய்யரின் ஸெண்ட்ரல் ஆர்ட் ப்ரஸ்ஸில் அது அச்சாயிற்று. பக்கங்கள் 66. விலை ரூ.1–1–0. தனியாக வேல் மாறல் பகுதியை மட்டும் இரண்டணா விலைக்கும் தந்தார்கள். இதற்குப் புரூப் திருத்தி முகவுரை எழுதியுள்ளார் திரு. தணிகைமணியவர்கள். அதில் வேல் மாறலுக்கு முன்னும் பின்னும் 20 முறை "திருத்தணியில்" அடியைச் சொல்லவும் என்று அச்சிடப்பெற்றிருந்தது. அதனால் 1976ல் வேல் மாறல் மஹா மந்த்ரம் அச்சிடப் பெற்றபொழுது அந்த முறை பின்பற்றப்பட்டது. மொத்தத்தில் ஒருமுறைப் பாராயணத்தில் "திருத்தணியில்" என்னும் அடி 108 முறை சொல்லப் பெறுகின்றது என்பது கருதத்தக்கது.

விளையாடி வருதலையே "வேல் மாறல்" எனக் குறித்தனர் ஸ்வாமிகள். வேலாயுதம் இடப் பெயர்ச்சி கொண்டு வேறு, மாறான இடங்களுக்கு மாறுவதனால் ப்ரயோக வேலாகி, அஸுர ஸம்ஹாரம், அடியார்க்கு அருளல், துஷ்ட நிக்ரஹம், ஶிஷ்ட பரிபாலநம் போன்ற பல்வகைச் செயல்களைச் செய்ய முடிகிறது. அதனாலேயே திருப்புகழ் ஸ்வாமிகள் நம்மனோர் பொருட்டாக, வேல் வகுப்பை வேல் மாறலாக மாற்றித் தந்து, அதன் செயல் திறனை அதிகப்படுத்தி, நமக்கு இருக்கும் பல்வகைய துன்பங்களையும், பிணிகளையும், கஷ்டங்களையும் நிவாரணம் செய்துகொள்ளக் கடல் போன்ற காரணம் இல்லாத தம் கருணையினால் வழிவகை செய்துள்ளார்கள்.

'வேல் மாறல்' பாராயணம் 'மன ஒருமைப்பாடு' என்னும் ஏகாக்ர சித்தத்தை ஏற்படுத்தும் வல்லமை உடையது; பின்னும், ஏவல், வைப்பு, பில்லி, ஶூந்யம், பேய், பிஶாஶு பிடித்திருத்தல் போன்ற துக்கங்களிலிருந்தும் அடியார்களை விடுவிக்க வல்லது; உடம்புப் பிணி, உள்ளப் பிணி, உயிர்ப் பிணி மூன்றையும் ஒருங்கே ஒழிக்க வல்ல உயர்வுடையது. தமிழ்ப் பேரறிஞர் – தணிகைமணி – ராவ்பஹதூர் – அமரர், டாக்டர் வ.சு. செங்கல்வராயப்பிள்ளை அவர்கள் 1941இல் பாடி அருளிய ஸச்சிதாநந்தர் கலிவெண்பாவில் வரும் பின்கண்ட அடிகள் மேற்கொண்ட கருத்துக்களையே வலியுறுத்தும்.

"தேரா மநமும் திகைப்(பு) ஒழிந்து – நேர்ஆக
ஓர்நிலையில் நின்றேநல் உண்மைப் பொருள்உணர்ந்து
தேர்நிலையைக் காணச் சிறந்(து)உதவும் – ஏர்நிலைகொள்
வேல்மாறல் தந்த விறலோனே!"

✪✪ "வேல்மாறல்" தனியாக வண்ணப் பட வடிவில் கிடைக்கிறது. அப் படம் "வேல் மாறல் மஹா மந்த்ர யந்த்ரம் (வேல் மாறல் சக்ரம்)" என்னும் பெயரில் வெளியாகி உள்ளது. அப் படத்தில் யந்த்ர ஶாஸ்த்ரப்படி நாற்புறமும் பூபுரமும், மத்தியில் சக்ரமும் அமைந்துள்ளன. சக்ரத்துக்குள் முறையே, ஸ்ரீ வ்யாஸ விநாயகர் (காளிக் கொம்பன், அம்பாபுரி, வடதிருமுல்லை வாயில்), ஸ்ரீ திருத்தணிகேஶர், ஸ்ரீ வைஷ்ணவி தேவி (வள்ளி – பொங்கி, அம்பாபுரி, வடதிரு முல்லை

வாயில்), ஸ்ரீமத் அருணகிரி நாதர் (வேல் வகுப்பை அருளியவர்), ஸ்ரீலஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள் (வேல் மாறலைத் தொகுத்தவர்), ஆடும் பரிவேல் அணிசேவல் ஆகிய ஆறு திருவுருவப் படங்களும் வலம் வரும் முறையில் அமைந்துள்ளன. "வேல் மாறல்" என்ற பேருக்கு ஏற்ப 1,3,5 எண்ணுள்ள வேல்கள் ஶக்தி வேல்களாகவும், 2, 4, 6 எண்ணுள்ள வேல்கள் இலை வேல்களாகவும் மாறி மாறி அமைந்துள்ளன. இந்த 6 வேல்களின் இலைகளுக்குள்ளேயே "வேல் மாறல்" மூலம் முழுவதும் பூர்வ, உத்தர பாகப் பாடல்களுடன் எழுத்து வடிவில் அடங்கி அமைந்துள்ளது. வேல்களின் காம்புகளுக்கு இடையில் "ஓம்நம : ஶிவாய" என்னும் ப்ரணவ பஞ்சாக்ஷரமாம் ஸ்ரீ ஸுப்ரம்மண்ய ஷடக்ஷர மஹா மந்த்ரமும் வட்டப் பாங்கில் அமைந்துள்ளது. வேல் காம்புகளின் நடுப் பகுதிகள் முறையே 1.2.3.4.5,6 என்ற எண்களைத் தாங்கி, வரிசையை நினைவூட்டுகின்றன.

வ்யாஸ விநாயகர் உத்தர கோஶ மங்கையிலும், அம்பாபுரி வைஷ்ணவி ஆலயத்திலும் இருப்பவர். வள்ளிமலை ஸ்வாமிகளின் இஷ்ட தேவதையாம் வைஷ்ணவியின் ஆலயத்தில் இருக்கும் கணபதியே இங்கு இடம் பெற்றுள்ளார். திருத்தணிகையைப் பற்றியது வேல் வகுப்பு ஆதலின், வேல் மாறல் யந்த்ரத்தில் திருத்தணிகை முருகவேளின் மூலஸ்த்தாந உருவம் இருப்பது சாலவும் பொருத்தமே. திருப்புகழ் ஸ்வாமிகளின் வழிபடு கடவுளான வள்ளி, பொங்கி என்னும் வைஷ்ணவி தேவி ஆத்ய பராஶக்தி ஆதலின், ஶக்தி (வேல்) சக்ரத்தில் மூல ஶக்தியாக அமைகிறாள். வேல் வகுப்பைப் பாடிய ஆசிரியர் அருணகிரியாரும், வேல் மாறலைத் தொகுத்தருளிய வள்ளிமலை ஸச்சிதாநந்த

---

ஸாது ராம் ஸ்வாமிகள் 1976இல் வடிவமைத்த வேல் மாறல் யந்த்ரச் சக்ரம் (அறுசீர் வ்ருத்தம்)

கணபதி, தணிகே சன், வேல் களிமயில், சேவல், மேன்மைப்
ப்ரணவபஞ் சாட்ச ரம், மா ப்ரபுவள்ளி மலைச்சு வாமி,
குணசக்தி, இலைவேல், கோலக் குறத்தியாய் வைஷ்ண வித்தாய்,
விணவர் போற் றருணை யார்காண் வேல்மாறல் சக்ரம் பாரீர்.

– அருளிசைமணி

ஸ்வாமிகளும் கார்த்திகை மூல நக்ஷத்திரத்திலேயே உதித்தருளிய இரு பெருங் குரவர்களாவர். அவர்கள் இருவரையும் மறந்தால் வேல்மாறல் பாராயணம் பலனைத் தராது. ஆதலின், அவர்கள் இருவரின் திருவுருவங்களும் இச்சக்ரத்தில் இடம் பெறுகின்றன. நாத, பிந்து, கலைகளின் வடிவமான சேவல், மயில், வேல் மூன்றும் ஒன்றுக் கொன்று இணைபிரியாதவை. அவை முருகவேளை நினைப்பிக்கும் முழுச் சின்னங்கள். ஆதலின், ''ஆடும் பரி (மயில்) 'வேல்' அணிசேவல் (கோழி)'' உருவப் படங்களும் இந்த யந்த்ரத்தில் இடம் பெற்றுள்ளன. ஆறு வேல்களும், ஆறு எழுத்துக்களும் ஆறுமுகப் பெருமானையே வரிவடிவத்திலும், ஒலி வடிவத்திலும் அன்பர்க்கு நினைவூட்டும்.

வேல் மாறல் பாராயணத்துக் கென்றே வெளியிடப்படும் இந் நூலில், பாராயணம் பண்ணும் பக்தர்கள் பொருளையும் தெரிந்து கொண்டு பாராயணம் பண்ணினால் நலம் என்று கருதியே வேல் வகுப்பின் பதவுரையோடு, ''விழிக்குத்துணை'', ''தடக்கொற்ற'', ''சலம்காணும்'' என்னும் கந்தர் அலங்காரப் பாடல்களுக்கு உரையும், ''சேயவன் புந்தி'' என்னும் கந்தர் அந்தாதிப் பாட்டுக்குப் பதவுரையும் ஈண்டுச் சேர்த்து அச்சிடப் பெற்றுள்ளன.

வேல் மாறல் படத்தை வாங்கிக் கொண்ட அடியவர்கள், அதற்குக் கண்ணாடி போட்டு, நாற்புறமும் சட்டம் இட்டுப், பூஜை அறையில் மாட்டி வைத்துக் கொண்டு நாள்தோறும் தூபம், தீபம், நைவேத்யம், தீபாராதனை முதலிய உபசாரங்களைப் பண்ணி வழிபட்டு வரல் வேண்டும். வேல் மாறலை நித்ய பாராயணம் பண்ணிவரலும் வேண்டும்.

## இந் நூலைப் பாராயணம் பண்ணும் நெறி முறை

இந்த வேல் மாறலை எம் மதத்தவரும், ஆண்களும், பெண்களும் யாராயிருந்தாலும் பக்தி ஸ்ரத்தையோடு பாராயணம் பண்ணி வரலாம். எந்தவித மநக்குறையோ, நோய் நொடியோ, வாழ்க்கைச் சிக்கல்களோ இல்லாதவர்களும் கூட ஷண்முகனாகவே இப் படத்தைப் பாவித்துப் பொதுப் படப் பாராயணம் புரிந்து வந்தால் எல்லா நன்மைகளையும் கிட்ட வைக்கும் ஒரு சிறந்த ரக்ஷை போன்றது இது. இதை வாங்கி வீட்டில் வைத்துப் பாராயணம் செய்தால் ஏதாவது

இடைஞ்சல் புதிதாக ஏற்பட்டு விடுமோ என்றெல்லாம் அஞ்சுகின்ற மூடப் பழக்க வழக்கங்களை நம் ஹிந்துக்கள் குறிப்பாக அடியோடு ஒழிக்க வேண்டும். காம்ய பூஜையாகச் செய்வோர் வேண்டிய வேண்டியாங்கு எய்துவர். நிஷ்காம்ய பூஜையாகச் செய்தால் பவப் பிணியைப் போக்கி மோக்ஷம் என்னும் வீடுபேறு பெறுவதற்குரிய சித்த சுத்தியையும் தரும் இந்நூற்பாராயணம். குறிப்பாக ஏதேனும் ஓர் உடல்நோயோ அல்லது உளநோயோ உள்ள நபர்கள், வேண்டிக் கொண்டு பாராயணம் செய்வதாயிருந்தால், எவருக்காக இவ் "வேல்மாறல்" பெறப் பட்டதோ அவர்கள் வஸிக்கும் வீட்டில் அன்னார் எங்குத் தங்கி அதிக நேரம் புழங்குகிறாரோ அந்த இடத்தில் இந்தப் படம் கண்ணாடி – சட்டம் இடப் பெற்று இருக்க வேண்டும். அதற்கு நாள் தோறும் ஒரு புஷ்ப மாலையோ அல்லது ஒரு பூவோ சாத்தி, ஊதுவத்தி அல்லது ஸாம்ப்ராணித் தூபம் காட்ட வேண்டும். இந்தப் புஸ்த்தகத்துடன் அந்தப் படத்தின் முன்பாக மரப்பலகை, கம்பளம், மான்தோல், தர்ப்பாஸநம் இவற்றுள் ஏதேனும் ஒன்றின் மேல் உட்கார்ந்து, திட நம்பிக்கையோடும், நிஜ விஶ்வாஸத்தோடும், ஶ்ரத்தா பக்தியோடும், முழு வேல் மாறலையும் ஒரு மண்டல காலம் (48 நாள்கள்) விடாமல் தொடர்ந்து, திநமும் காலையோ மாலையோ ஏதேனும் ஒரு வேளையாகிலும், ஒரு முறையாகிலும் பாராயணம் பண்ண வேண்டும். இப் புஸ்தகத்தில் குறிக்கப் பெற்றுள்ள ராக தாளங்களின் படியோ, அல்லது வேறு ஏதாவது இசை அமைத்துக் கொண்டோ, இன்றேல் இசையே கைவராதவர்கள் ஆயின், இசையே இல்லாமலோ எப்படியோ அப்படி உசிதப் படியாகப் பாராயணம் பண்ணலாம்.

வேல் மாறல் பாராயணத்தை யாரும் தமக்கென்றோ அன்றிப் பிறர் நலன்களை முன்னிட்டோ எங்ஙனமேனும் மேற்கொண்டு செய்யலாம். படமும், இப் புஸ்த்தகமும் கைக்கு வந்தபின் அடுத்தாற்போல் வந்து அமைகின்ற அமாவாஸை, ஶுக்லபக்ஷத்து ஷஷ்டி, பௌர்ணமி திதி நாள்கள், அல்லது விஶாகம், க்ருத்திகை நக்ஷத்ரங்கள் அமைந்த திநங்கள் இவற்றுள் ஏதேனும் ஒரு நாளில் பாராயணத்தினைத் துவங்கி அன்று முதல் ஸரியாக நாற்பத்து எட்டு நாள்கள் எண்ணிக் கடைசி நாள் எந்நாளாய் அமையினும் கவனிக்காமல் ஓதுதலை முடித்து விடுதல் நல்லதாகும். பாராயணம் பண்ணும் போது வேறு எந்தப் பேச்சும் பேசாமலும் இதை முழுதும் முடித்த பின்னரே பிற செயல்களில் ஈடுபடுதல் – அப்படி இடை நடுவே பேச வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டால் பேசி விட்டுப் பழையபடிப்

பாராயணத்தை ஆதி முதலினின்று தொடங்கிச் செய்து முடித்தல் – இவற்றை நித்யக் கடமைகளாகக் கொள்ளலும் வேண்டும்.

பாராயணம் தொடங்கிய பின், அந்த ஒரு மண்டல காலத்துக்குள் வெளி ஊர்க்குப் போவது, தேஹ அஸௌக்யம், பிறந்த தீட்டு, இறந்த தீட்டு முதலிய அஸௌகர்யங்கட்கு ஆட்பட நேரும் ஆயின், பாராயணம் பண்ணும் நபர் ஆணாயின் அந்தக் கால அளவுக்கு மட்டும் அவர்க்குப் பதிலாக அவருடைய மனைவி, பிள்ளை, பெண் போன்ற நெருங்கிய உறவினர் எவரையேனும் கொண்டு, பாராயணம் நிற்காமல் தொடர்ந்து நடக்கும்படிப் பண்ண வைக்கலாம். அங்ஙனமே, பாராயணம் செய்பவர் ஒரு பெண்ணாயின், அவர்க்கு மாத விலக்குப் போன்ற தடைகள் ஏற்படும் காலங்களில் மட்டும் தமக்குப் பதிலாகத் தம் புருஷன், புத்ரன், புத்ரி போன்ற நெருக்கமான பந்துக்கள், நண்பர்கள் எவரேனும் ஒருவரைக் கொண்டு இடையூறின்றித் தொடர்ந்து பாராயணம் நடைபெற ஏற்பாடு செய்யலாம். மாத விலக்காகும் ஸ்த்ரீகள், விலக்கான 4 நாட்களிலும் அவர்கட்குப் பதிலாகப் பாராயணத்தை விடாமல் தொடர்ந்து செய்ய யாரும் இல்லாமற் போனால், அந்தக் குறிப்பிட்ட 4 நாட்களிலும் தாம் பாராயணம் செய்யாமல் விடுத்துப், பிறகு, 48 ஆம் நாள் முடிப்பதற்குப் பதிலாக 52 ஆம் நாளில் பூர்த்தி பண்ணலாம். வெளியூர்க்குப் படத்தையும், புஸ்தகத்தையும் எடுத்துச் சென்று அங்கும் விடாமல் நாளும் பாராயணம் செய்து மண்டலத்தில் இடைவெளி ஏற்படாமல் பார்த்துக் கொள்ள முடியும் ஆயின் அங்ஙனம் செய்வதிலும் தடை ஏதும் இல்லை. விரைவில் பலன் தரும். ஆதலால், கூடிய வரையிலும் ஒரே இடத்தில் இருந்து பாராயணம் செய்தலே மிக நல்லது. வேல் மாறல் பாராயணத்தில் மண்டலத் தொடர்ச்சியில் முறிவு ஏற்படல் ஆகாது என்பதுவே இதனுடைய முக்யக் கொள்கையும், சட்டமும் ஆகும். வேல் மாறலையே ஒரு குறிப்பிட்ட பலனை எதிர்பார்த்துப் பாராயணம் செய்யும் நபர், தம் மநம் வேறு இடங்களில் அலைபாய விடாமல் அதையே முழு நம்பிக்கையோடு பாராயணம் செய்தலும் மிக முக்யம்.

வேல் மாறல் பாராயண ஸமயங்களில் வேல் மாறல் மஹா மந்த்ர யந்த்ரப் படத்துக்குப் புஷ்பம் சாத்துதல், தூபம், தீபம், நிவேதநம், தீபாராதனைகள் முதலியவற்றைத் தம்மால் இயன்ற வரையில் செய்தல் வேண்டும். வீட்டிலுள்ள இதர

பூஜைகளோடு கலந்தும் இந்தச் சக்ரத்தைப் பூஜிக்கலாம். பாராயண மண்டலப் பூர்த்தி நாளன்று விசேஷமான ஆராதநங்கள் செய்யத்தான் வேண்டும் என்று கட்டுப்பாடோ கட்டாயமோ ஏதும் இல்லை. ஆனால், அவ்வாறெல்லாம் செய்ய வஸதி இருந்து செய்தால் விசேஷமே ஆகும். மண்டலம் ஆகி விட்டதே எனப் பாராயணத்தை நிறுத்தி விடாமல் மேலும் தொடர்ந்து செய்யப் பக்தியும், ஶக்தியும், விருப்பமும் இருக்கிறவர்கள் ஆயுள் பர்யந்தம் நாள் தோறும் பாராயணம் பண்ணி வந்தாலும் இந்த வேல் மாறல், வேல் வகுப்பில் 11–ம் அடியில் கூறியுள்ளபடி எங்கும், எப்போதும், யாருக்கும், எவ்வகையிலும் ரக்ஷையாக இருந்து பேருதவி புரியும் என்பதில் சிறிதளவும் ஐயமே வேண்டுவதில்லை.

வேல் மாறல் பாராயண ஸமயங்களில், சக்ரத்திற்கு முன்பு, திநமும் ஒரு தட்டில் திருநீற்றை வைத்திருந்து பாராயணம் பூர்த்தி ஆனதும் யாருக்காகப் பாராயணம் பண்ணப்பட்டதோ அவரும், அவர் பொருட்டாகப் பாராயணம் செய்பவரும், மற்றையோரும் கூட அந்த விபூதியை உடம்பிலும் பூசி, நெற்றியிலும் அணிந்து கொண்டு வரவேண்டும். யாருக்காகப் பாராயணம் குறிப்பாக நடைபெற்றதோ அன்னார் மட்டும் அந்தத் திருநீற்றுப் ப்ரஸாதத்தில் சிறுஅளவேனும் உள்ளுக்குக் கொள்ளவும் வேண்டும்.

குறித்த ஓர் இடைஞ்சல் போக வேண்டி இதை ஒரு மண்டல காலம் (48 நாட்கள்) பாராயணம் பண்ணி அதனால் நினைத்த கார்ய ஸித்தி அடைந்தவர்கள், பிறகும் தொடர்ந்து திநமும் பாராயணம் பண்ணிவர இயலாவிட்டாலும், அமாவாஸை, ஸங்கடஹர சதுர்த்தி, ஶுக்லபக்ஷ ஷஷ்டி, க்ருத்திகை, விஶாகம் இவை அமையும் நாள்களிலும் ப்ரதி ஶநிக்கிழமை தோறும் ஸூர்ய, சந்த்ர க்ரஹண புண்ய காலங்களிலும் இந்த வேல் மாறலை ஒரு தடவையேனும் நிஶ்சயம் பாராயணம் புரிதல் வேண்டும்.

வேல் மாறல் பாராயணத்துக்கான இத்தகைய நெறி முறைகளைக் கோவைப் படத் தொகுத்தும் பாராயணம் பண்ணுவோர்க்கு, உபதேஶித்தும் தொடர்ந்து வேல் மாறலை வழங்கி வரும் பெருமை, ஸ்ரீலஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் முதற் சீடரான தவத்திரு. ஸ்வாமி அண்வாநந்தா (ஸாது பார்த்த ஸாரதி) அவர்களையே

சாரும். அவர்களே இவ் 'வேல் மாறல் மன்றத்தின்' தலைவராய் இருந்து. இம் மன்றத்தை 8–8–1976ல் பெங்களூர் – அல்ஸூர், ஸ்ரீ ஶங்கரர் த்யாந கேந்த்ரத்தில் தொடங்கியும் வைத்து, நமக்கு அருளாசி கூறியது நாம் எல்லாம் செய்த தவப்பேறே ஆகும். வேல் மாறலைப் பாராயணம் செய்து, வேல் மாறல் யந்த்ரத்தையும் விடாமல் பூஜித்து வருபவர்கள் வேல் முருகனின் க்ருபைக்கும், வேலாயுதத்தின் மேலாய திருவருளுக்கும், ஸ்ரீலஸ்ரீ திருப்புகழ் ஸச்சிதாநந்த சுவாமிகள் – தவத்திரு. அண்வாநந்த ஸ்வாமிகள், ஆகியோரின் குருவருளுக்கும் உரியவர்களாகி இஹ பர ஸௌபாக்யங்கள் எல்லாம் பெற்று இன்புறுவார்கள் என்பதில் எள்ளளவும் ஸந்தேஹமே இல்லை.

இங்ஙனம்,

(அருட்கவி) ஸாது ராம் ஸ்வாமிகள், (துணைத் தலைவர்)

"வேல் மாறல் மன்றம்" பெங்களூர்–560 008

பெங்களூர்–8

7–9–1976.

# இரண்டாம் பதிப்பின் முகவுரை

வேல் மாறல் மன்ற இடமாற்றமும், பதிவும்

அன்புடையீர்,

வணக்கம், முந்தைய தலைவர் – காலம் சென்ற உயர் தவத்திரு ஸ்வாமி அண்வாநந்தா அவர்களால் 8–8–76இல் பெங்களூரில் தொடங்கி வைக்கப் பெற்று, 1976 முதல் கர்நாடகப் ப்ரேதேஶம், பெங்களூர் – 560 008, அல்ஸூர், ஸோமேஶ்வரபுரம், நான்காம் குறுக்குச் சாலை, எண்.157, 'ஸரஸில்'', முதற் செயலர், திருவாளர் எஸ். ஜயராமையர் அவர்களால் இயக்கப்பட்டு வந்தது வேல் மாறல் மன்றம். தம் முதுமை காரணமாக மேலும் மன்றத்தைத் தொடர்ந்து இயக்கச் செயலரால் இயலாமற் போனதாலும், பெங்களூரிலேயே இம் மன்றத்தை நடத்த முயன்றும், வேறு யாரும் பொறுப்பேற்றுச் செயல்பட முன்வராத காரணத்தாலும், வேல் மாறல் மன்றம் 1983 ஸெப்டம்பரில் சென்னை – நங்கை நல்லூர்க்கு மாற்றப்பட்டது. சென்னை–61–லேயே 11–7–1984ல் 171 என்ற எண்ணில் பதிவும் செய்யப் பெற்றுத் தொடர்ந்து செயல்பட்டும் வருகின்றது.

## இரண்டாம் பதிப்பு

முதற் பதிப்பாக வெளியிடப் பெற்ற புஸ்தகங்கள் (6,000) அனைத்தும் செலவாகி விட்டமையால், இந்த இரண்டாம் பதிப்பை வெளியிட வேண்டியதாயிற்று. முதற் பதிப்பின் புஸ்தகம், வேல் மாறல் சக்ரப் படம் இரண்டும் வெவ்வேறு அளவுகளில் இருந்தமையின், தபால் மூலம் அவற்றை அனுப்புவது இடர்ப்பாடாக இருந்ததால் மந்த்ரப் புஸ்தகத்துக் குள்ளேயே யந்த்ரப் படமும் வைக்கப் பெறின் வஸதியாயிருக்கும் என்பதை முன்னிட்டுப் புஸ்தகத்தின் அளவு, இப்பொழுது, முந்தையதை விடப் பெரியதாக ஆக்கப்பட்டிருக்கிறது. மேற்கூறிய காரணத்தாலும் தற்காலக் காகித விலை (ஆப்செட் பிரிண்டிங் முறைப்படி) அச்சுக் கூலி முதலியவற்றின் செலவு மிகுதியினாலும் படத்துடனும் பெரிய அச்சு எழுத்துக்களுடன் கூடிய இப் புஸ்தகத்தின் விலை (அந்த தாந நன்கொடை குறைந்த பக்ஷம் ரூ. 6/– தவிர) ரூ. 10/—ஆக அமைக்கப்பட்டிருக்கிறது. வேல் மாறல் தமிழ் நாட்டில் பதிவான பின், முதன் முதல் வெளிவரும் பதிப்பு இதுவே.

## க்ரந்த எழுத்துக்கள்

இந்தப் பதிப்பில் ஸம்ஸ்க்ருதச் சொற்களில் வடமொழிச் சொற்களான ஆச்ரமம், ஈசன், சக்தி, சிகை, சிவன், திசை என்பன போன்ற சொற்களில் உள்ள 'ச' என்ற எழுத்தை முறைப்படி உச்சரிப்பதற்காக ஶ், ஶ, ஶி, ஶீ முதலிய க்ரந்த எழுத்துக்கள் உபயோகப்படுத்தப்பட்டுள்ளன. அதன்படி உச்சரித்து அனைவரும் பாராயணம் செய்யக் கோருகிறேன் (ஜ, ஸ, ஷ, க்ஷ என்ற எழுத்தினத்தைச் சேர்ந்ததே 'ஶ' எனும் எழுத்தும்).

## பதிப்புரிமை

முதற் பதிப்பிற்காக, வேல் வகுப்பு மற்றும் வேல் மாறலின் முன்பின் உள்ள கந்தர். அலங்காரம், கந்தர், அந்தாதி முதலிய பாடல்கள் இவற்றிற்குத் தாம் எழுதிக் கொடுத்த உரைப் பகுதிகளை இந்த இரண்டாம் பதிப்பிலும் வெளியிட்டுக் கொள்ளும் உரிமையை வேல் மாறல் மன்றத்தார்க்கே, மன்றத்தின் மற்றைய உபதலைவரான அருட்கவி

தவத்திரு. ஸாது ராம் ஸ்வாமிகள் அவர்கள் கொடுத்திருக்கிறார்கள். அவர்களது பொன்விழா ஆண்டு 1986–87 நினைவுப் பதிப்பாகவும், வேல் மாறல் மன்றத்தின் பத்தாம் ஆண்டு நிறைவு விழா வெளியீடாகவும் இது வெளிவருகின்றது. இந்த வேல் மாறல் மஹாமந்த்ரப் புஸ்தகத்தையும், வேல் மாறல் யந்த்ரத்தையும் உரையுடன் அச்சிட்டு வெளியிடும் உரிமை வேல் மாறல் மன்றத்திற்கே உரியது.

பணவிடை அனுப்புவோர் (மணியார்டர் கூப்பனில்) தங்கள் தற்போதைய முகவரியைத் தவறாமல் எழுதக் கோருகிறேன்.

பணம் அனுப்ப வேண்டிய முகவரி:
செயலர் & பொருளர் "வேல் மாறல் மன்றம்" பதிவு
"பொங்கி மஹா ஸரஸ்" மனை–21, பொங்கி மடாலயம் தெரு, நங்கைநல்லூர், சென்னை – 600 061.

சென்னை–61 இங்ஙனம்,
21–11–1986. (அருள் இசை மணி–திருப்புகழ் நல்லிசைச் செல்வர்) ஸு.வே. ஸுப்ரம்மண்யன் (துணைத் தலைவர்)
"வேல் மாறல் மன்றம்" சென்னை – 600 061

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. வேல்மாறல் மஹாமந்த்ரம் (தபால் செலவுடன்) | - ரூ. 40 + 20 | | 8. | திருப்புகழ் போற்றும் திருமுருகன்–அர்ச்சனை | - ரூ. 12 + 4 |
| 2. திருக்கடவூர்ப் ப்ரபந்தத் திரட்டு | - ரூ. 10 + 7 | | 9. | கதிராமங்கலம் வனதுர்க்கை அந்தாதி | - ரூ. 10 + 4 |
| 3. மார்கழிப் பாராயணத் திரட்டு | - ரூ. 25 + 7 | | 10. | நவக்கிரஹ அருட்புகழ் | - ரூ. 15 + 7 |
| 4. திருமுருகன் ஹர ஹரோ ஹராக் கும்மி (108) | - ரூ. 10 + 4 | | 11. | ஐயப்பன் அருட்புகழ் | - ரூ. 12 + 4 |
| 5. திருப்போரூர் முருகன் இரட்டைமணி மாலை | - ரூ. 5 + 1 | | 12. | ஆஞ்ஜநேயர் அருட்புகழ் | - ரூ. 12 + 4 |
| 6. சென்னைத் திருக்கோயில்கள் திரு அருட்புகழ் - (ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் சரித்ரமும் பாடல்களும்) பகுதி-1 | - ரூ. 50 + 10 | | 13. | மடிப்பாக்கம் திருக்கோயில்கள் திருஅருட்புகழ் | - ரூ. 15 + 4 |
| | | | 13. | திருப்புகழ் நவமணி கேஸட்டு (60 நிமிடம்) | - ரூ. 30 + 20 |
| 7. சென்னைத் திருக்கோயில்கள் திரு அருட்புகழ் - பகுதி–2 | - ரூ. 50 + 10 | | 14. | வேல்மாறல் மஹா மந்த்ரம் (திருப்புகழ்ப் பாடல்களுடன்) CD ஒலித்தகடு (60 நிமிஷம்) | - ரூ. 40 + 20 |

# முக்யக் குறிப்பு

## ஆறு நாட்கள் அருட்பெருந் திருவிழாக்கள்

ஆண்டுதோறும், கார்த்திகைக் க்ருத்திகையை ஒட்டினாற் போலப் பொங்கி மடாலயத்தில் கீழ்க்கண்டபடித் தொடர்ந்து ஆறு நாட்கள் அருட்பெருந் திருவிழாக்கள் நடைபெறுகின்றன.

1. ஸந்யாஸிநி ஸ்ரீ மோநாம்பா அம்மையாரின் வருஷாந்தர ஆராதனை விழா (ஆண்டு தோறும் கார்த்திகை ஶீ ஶுக்ல பக்ஷத் தஶமித் திதி)
2. வேல் மாறல் மன்றத்தின் ஆண்டு நிறைவு விழா (ஏகாதஶி)
3. ஸ்ரீ அருணகிரி நாதர் அருள் விழா (த்வாதஶி)
4. நங்கை நல்லூர் ஸ்ரீ வள்ளிமலை வள்ளல் திருப்புகழ் மன்றத்தின் ஆண்டு நிறைவு விழா மற்றும் ஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் வருஷாந்தர ஆராதனை விழா (த்ரயோதஶி)
5. வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள் திருவிழா (சதுர்த்தஶி)
6. வேல் மாறல் அகண்ட பாராயண வேள்வி விழா (கார்த்திகைக் க்ருத்திகை மற்றும் பௌர்ணமி)

மேற்கண்ட ஆறு நாள் அருள் திருவிழாக்களிலும், சென்னை – 61, வேல் மாறல் மன்றத்தின் சார்பில் ஆண்டுதோறும் அந்ந தாந கைங்கர்யம் நங்கைநல்லூர்ப் பொங்கி மடாலயத்தில் விடாது நடைபெறும்.

வேல்மாறல் பாராயணம் செய்யும் அன்பர்கள் மேற்கண்ட ஆறு நாள் அந்ந தாநத்திற்காகத் தங்களால் இயன்ற தொகையை ஆண்டு தோறும் மறக்காமல் மன்றத்திற்கு அனுப்பி உதவுதல் சாலச் சிறந்தது.

உ

ஸ்ரீ பொங்கி க்ருபா

## மூன்றாம் பதிப்பின் முகவுரை

" வேல்வகுப்பி னின்று வேல்மாறல் என்னும் நூல்வகுத் தளித்த நூதன போற்றி "

– வள்ளிமலை வள்ளல் 1000 போற்றித் திருவகவல் (வரிகள் 272, 273)

அருணகிரி நாத ஸ்வாமிகள் வேல் வகுப்பை அருளினார்கள். வேல் வகுப்பினின்று ஸர்வ ரோக நிவாரணியாக வேல்மாறலைத் தொகுத்தார்கள் ஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள். சக்தி வழிபாடான சாக்த ஸம்ப்ரதாயத்தில் நடைமுறையில் உள்ள பல்லவ ப்ரயோக முறையின் படி 64 அடிகளிலும் ஒவ்வோரடியின் முடிவிலும் வேல் வகுப்பின் 16 ம் அடியை ஓதும்படி அமைத்திருக்கிறார்கள் ஸ்வாமிகள். இந்த வேல் மாறல் பற்றிய எல்லாச் செய்திகளையும் இப்பதிப்பில் அச்சாகியுள்ள முதல், இரண்டாம் பதிப்புக்களின் முகவுரைகளைப் படித்து அறியலாம்.

இரண்டாம் பதிப்புப் பிரதிகள் அனைத்தும் தீர்ந்து (செலவாகி) விட்டமையால் இந்த மூன்றாம் பதிப்பு வெளியிடப் பெறுகின்றது. ஸங்கீத ஞானம் உள்ளவர்கள் பின்பற்றிப் பாடுவதற்காக ஸ்ரீஸாதுராம் ஸ்வாமிகள் அமைத்துள்ள ராகங்களின் பெயர்கள் தொடக்கத்திலும் முடிவிலும் 64 அடிகளுக்கிடையிலும் இப் பதிப்பில் அச்சிடப் பெற்றுள்ளன.

கடந்த சில ஆண்டுகளாகப் பொங்கி மடாலயத்தில் செவ்வாய்க் கிழமைகளில் நடைபெற்றுவரும் வேல் மாறல் பாராயண முறைக்கேற்ப, வேல் மாறல் மஹா மந்திரத்தின் முற் பகுதியில் விநாயகர், பொங்கி (வைஷ்ணவி), அருணகிரியார், ஸ்ரீ வள்ளிமலை ஸ்வாமிகள், ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் ஆகியோர் துதிகள் இப் பதிப்பில் சேர்க்கப்பெற்றுள்ளன. பிற்பகுதியில், மிக முக்கியமான ஏழு வேண்டுகோள் திருப்புகழ்கள், "ஓலையும் தூதரும்", "வீர வேல் தாரை வேல்", "வேலாயுத ஸ்வாமி", "தினை வேத்தி" "மூலா நிலமதின்", "மைவரும்", "நினைத்த தெத்தனை" எனத் தொடங்கும் பாடல்களுடன், வள்ளிமலை வள்ளல் தொகுத்த மகுட அடிகள் சிலவும், "ஆறிரு தடந்தோள்", "வான் முகில்", "கல்லாப் பிழையும்", ஆகிய பாடல்களும் இப் பதிப்பில் சேர்த்து அச்சிடப்பெற்றுள்ளன.

"கால் மாறி", "வேல் வகுப்பை" எனத் தொடங்கும் 6.12 ஆம் பாடல்களுக்கும் பொழிப்புரைகள் இப் பதிப்பில் எழுதிச் சேர்க்கப் பெற்றுள்ளன.

ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகளால் 1976 இல் வடிவமைக்கப் பெற்ற வேல் மாறல் யந்திரச் சக்ரம், முதல் இரண்டாம் பதிப்புக்களில் புத்தகத்துள்ளேயே இணைக்கப்பெற்றிருந்தது. அந்தச் சக்கரத்தில் இருந்த படங்கள் தெளிவாக இல்லை. "கால் மாறி", "வேல் வகுப்பை" என்னும் பாடல்களும் வேல்களுக்குள் இடம்பெறவில்லை.

ஆதலின், புதிய வண்ணப் படங்களைச் சேர்த்தும், 6 வேல்களுக்குள் வேல் மாறல் மஹா மந்த்ரப் பகுதிக்குள் உள்ள 7 பாடல்களையும் சேர்த்தும், புதிய யந்திரச் சக்கரம் ஒன்றை, நங்கைநல்லூர் ஸ்வர்ண புரி ட்ரஸ்ட் ஸ்ரீ R. ஸ்ரீதரன் அவர்கள் தம் கணினியில் தயாரித்துத் தந்திருக்கிறார்கள். மேலும் அட்டையின் 4 பக்கங்களுக்கான படங்களையும் கொடுத்திருக்கிறார்கள். அவர்கட்கு எங்கள் அன்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். இதனை அழகுற அச்சிட்டுத் தந்த 'விஷுவல் கிராபிக்ஸ்' ஸ்ரீ R. அப்பாசாமி அவர்களுக்கும் எங்கள் நன்றி.

இந்தச் சக்கரப் படம், வேல் மாறலை வாங்கும் அன்பர்கட்குத் தனியாக, இலவச இணைப்பாகக் கொடுக்கப்பெறும். தவிர, சிறிய அளவிலான சக்கரப் படம் ஒன்றும் ஒவ்வொரு பிரதியிலும் இருக்கும்.

இந்த மூன்றாம் பதிப்பு ஸர்வஜித் மாசி சுக்ல பக்ஷ பஞ்சமி (ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகளின் எட்டாம் ஆராதனை) நாளில், 11–3–2008 இல் வெளியிடப் பெறுகின்றது. இதனை எல்லா அன்பர்களும் முன் போல் வாங்கி, ஓதி, எல்லா விதத்திலும் மேன்மை அடையத் தணிகைக் குமரன் திருவருளும், வள்ளிமலை வள்ளல் குருவருளும் கூடுவதாக.

நங்கை நல்லூர்,
சென்னை–600 061,
24–2–2008.

இங்ஙனம்,
V. கிருஷ்ணதாஸ் – செயலர், பொருளாளர், வேல்மாறல் மன்றம் ✆: 65469373
S.V. ஸுப்ரம்மண்யன் – தலைவர், வேல்மாறல் மன்றம் ✆: 22312473

# வேல் மாறல் மஹாமந்த்ர யந்த்ரம்

## (வேல் மாறல் சக்ரம்)




வேல் மாறல் சக்ர வடிவமைப்பு: அருட்கவி நலத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்.

கணினி வரைவு: ஆகம நன்மொழி ஆய்வர் R.ஸ்ரீதரன்.

[illegible]

உ

ஸ்ரீ க்ஞாந கணேஶகிரி நாதர் துணை

ஸ்ரீ பொங்கி க்ருபா திருத்தணிகேசன் துணை

வேலும் மயிலும் சேவலும் துணை ஸச்சிதாநந்த குருநாதர் துணை

# வேல்மாறல் மஹா மந்த்ரம்

(ஸர்வ ரோக நிவாரணி)

1. ஸ்ரீ க்ஞாந கணேசகிரி நாத ஸ்வாமி கீ ஜய்!
2. ஸ்ரீ பொங்கி மோநாம்பிகா தேவி கீ ஜய்!
3. ஸ்ரீ ஸச்சிதாநந்த தண்டபாணி ஸ்வாமி கீ ஜய்!
4. ஸ்ரீ பக்த அருணகிரிநாத ஸ்வாமி கீ ஜய்!
5. ஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமி கீ ஜய்!
6. ஸ்ரீ ஸாதுராம் மஹராஜ் கீ ஜய்!
7. வெற்றிவேல் முருகனுக்கு ஹரஹரோ ஹரா!
8. ஸ்ரீ சக்தி வேலாயுத ஸ்வாமி கீ ஜய்!
9. ஸ்ரீ வேல் மாறல் மஹாமந்த்ர மூர்த்தி கீ ஜய்!

ராகம் : ஆநந்த ஃபரவி) **கணபதி துதித் திருப்புகழ்** (தாளம் : ஆதி

1. உம்பர்தருத் தேநுமணிக் கசிவாகி – ஒண்கடலிற் றேன் அமுதத் துணர்வூறி;
இன்பரஸத் தேபருகிப் பலகாலும் – என்றன் உயிர்க் காதரவுற் றருள்வாயே;
தம்பிதனக் காகவனத் தணைவோனே – தந்தைவலத் தால் அருள்கைக் கனியோனே;
அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே – ஐந்துகரத் தானைமுகப் பெருமானே (1)

ஸரஸ்வதி) **ஸ்ரீ வைஷ்ணவி அருட்புகழ் (கட்டளைக் கலித்துறை)** (ஸூத்தாங்கம்

2. ''சேருங்கள்! ஒன்றாக எல்லீரு மாய்என் திரு அழகைப்
பாருங்கள்! பார்த்து விழிவாயால் அள்ளிப் பருகிமகிழ்
கூடுங்கள்! நும் குறை தீருங்கள்! வந்து குடியிருங்கள்!
வாருங்கள்!'' என்பாய்! வடமுல்லை வாயில்வாழ் வைஷ்ணவியே! (2)

– ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள்

ஆரபி) **அருணகிரி நாதர் துதி (கட்டளைக் கலித்துறை)** (ஸூத்தாங்கம்

3. அந்தாதி இல்லா இறைவனுக் கந்தாதி அன்றுரைத்தும்
நந்தா வகுப்பலங் காரம் அவற்கே நனிபுனைந்தும்
முந்தா தரவில் அவன்புகழ் பூதியும் முற்றும் சொன்ன
எந்தாய்! அருண கிரிநாத! என்னை நீ ஏன்றருளே! (3)

– திரு தணிகை மணி வ.சு.செ. பிள்ளையவர்கள்

மாண்ட்) **வள்ளிமலைத் திருப்புகழ் ஸ்வாமிகள் துதி (அறுசீர் விருத்தம்)** (ஆதி

4. பச்சைமால் மருகன் கீர்த்தி பகர்திருப் புகழை நாளும்
இச்சையால் ஓதும் நாவன் எம்பிராற்(கு) ஆவி ஆகும்
இச்சையாள் வள்ளி பாத இருதயன் எங்கள் ஆசான்
ஸச்சிதா நந்தன் பாத சரணமே சரண் எமக்கே. (4)

**– திரு தணிகைமணியவர்கள்**

சிம்மேந்த்ர மத்யமம்) **ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் துதி (அறுசீர் விருத்தம்)** (ரூபகத்தாங்கம்

5. வள்ளிமலை வள்ளல் திருப் புகழ்ச்சச்சி தாநந்த மகநீ யர்தம்
ஒள்ளியநற் சீடர்புகழ் ஓங்கு திருப் போரூரான் உவந்தாட் கொண்ட
கள்ளமிலாத் துறவிவள்ளி பொங்கிவயி ணவிபதங்கள் கருத்தில் வைத்த
தெள்ளியசீர் அருட்புகழ்சொல் ஸாதுராம் ஸ்வாமிபதம் சிரம்மேற் கொள்வாம். (5)

– ஸு.வேலஸுப்ரமண்யன்

# வேல் மாறல் மஹா மந்த்ரம்

**வேல் மாறல் மஹாமந்த்ர பாராயணப் பலன்**

ராகம் : ஹம்ஸத்வநி) **(அறுசீரடி ஆசிரிய விருத்தம்)** (தாளம்: ரூபகத்தாங்கம்

வேலும் மயிலும் சேவலும் துணை (6 முறை ஓதவும்)

6. கால்மாறி ஆடும் இறை கால்முளையாம் கந்தர்கைவேல் வகுப்பைக் கண்டு
நூல்மாறி வரத்தொகுத்து நோய்பிலிபேய் சூந்யம்எலாம் நூற வேண்டி
"வேல்மாறல்" எனும்பேரால் வகுத்தருளி வள்ளிமலை மேதை வள்ளல்
பால்மாறல் இன்றிஉத(வு) அரிய யந்த்ர மந்த்ரஜபப் பயன்மிக் காமே! (6)

– அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்

வேலும் மயிலும் சேவலும் துணை (6 முறை ஓதவும்)

### விழி, மொழி, முன்புசெய் பழி, வழித் துணைகுஹன்

ஷண்முகப்ரியா) **கந்தர் அலங்காரம் (கட்டளைக் கலித்துறை)** (ஶூத்தாங்கம்

7. விழிக்குத் துணைதிரு மெல்மலர்ப் பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காஎனும் நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணைஅவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலும்செங் கோடன் மயூரமுமே. (7)

வேலும் மயிலும் சேவலும் துணை (6 முறை ஓதவும்)

### மயிலின் திறம் சொலும் மயில்அலங்காரம்

பிலஹரி) **கந்தர் அலங்காரம் (கட்டளைக் கலித்துறை)** (ஶூத்தாங்கம்

8. தடக்கொற்ற வேள்மயி லே! இடர் தீரத் தனிவிடில் நீ
வடக்கிற் கிரிக்(கு) அப் புறத்தும்நின் றோகையின் வட்டம்இட்டுக்
கடற்(கு)அப் புறத்தும் கதிர்க்(கு)அப் புறத்தும் கநகசக்ரத்
திடர்க்(கு)அப் புறத்தும் திசைக்(கு)அப் புறத்தும் திரிகுவையே! (8)

வேலும் மயிலும் சேவலும் துணை (6 முறை ஓதவும்)

✪ ராக மாலிகை) **வேல் மாறல் மஹா மந்த்ரம்** (தாளம் : மிஶ்ர ஜம்பை

சந்தம்: தனத்ததன தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தனத்ததன தனத்ததன தானம்

9. திருத்தணியில் உதித்(து) அருளும் ஒருத்தன் மலை விருத்தன் என(து)
உளத்தில்உறை கருத்தன்மயில் நடத்துகுஹன் வேலே

(இந்த அடியை முதலில் 10 முறை நாட்டை ராகத்திலும்,
10 முறை கௌளை ராகத்திலும் ஜம்பை (கண்ட சாபு) தாளத்தில் பாடவும்)

ஆரபி)

1. பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்தநகை கறுத்தகுழல்
சிவத்த இதழ் மறச்சிறுமி விழிக்குநிகர் ஆகும் – திருத்†
2. திருத்தணியில் உதித்(து) அருளும் ஒருத்தன்மலை விருத்தன்என(து)
உளத்தில்உறை கருத்தன்மயில் நடத்துகுஹன் வேலே – திருத்
3. சொலற்(கு)அரிய திருப்புகழை உரைத்தவரை அடுத்தபகை
அறுத்(து) எறிய உறுக்கிஎழு(ம்) மறத்தைநிலை காணும் – திருத்

---

✪ இந்த வேல்மாறலை ஒரே ராகத்திலும், அல்லது பல ராகங்களிலும் அல்லது ராகமே இல்லாமலும் அவரவர்கள் ஸௌகர்யப்படிப் பாராயணம் செய்யலாம். இசை அமைப்பை விடப் பாராயணத்தை விடாது செய்வதே முக்யம்.

† "திருத்" என உள்ள இடங்களில் "திருத்தணியில்" எனத் தொடங்கும் அடி முழுவதையும் ஒரு முறை ஓதவும்.

4. தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி தரித்தமுடி
படைத்தவிறல் படைத்தஇறை கழற்கு நிகர் ஆகும் – திருத்

வராளி)

5. பனைக்கைமுக படக்கரட மதத்தவள கஜக்கடவுள்
பதத்(து) இடு(ம்) நி களத்துமுளை தெறிக்கவரம் ஆகும் – திருத்
6. சினத்(து) அவுணர் எதிர்த்தரண களத்தில்வெகு குறைத்தலைகள்
சிரித்(து)எயிறு கடித்துவிழி விழித்(து)அலற மோதும் – திருத்
7. துதிக்கும்அடி யவர்க்(கு) ஒருவர் கெடுக்கஇடர் நினைக்கின் அவர்
குலத்தைமுதல் அறக்களையும் எனக்(கு)ஓர் துணை ஆகும் – திருத்
8. தலத்தில்உள கணத்தொகுதி களிப்பின்உண வழைப்ப(து) என
மலர்க்கமல கரத்தின்முனை விதிர்க்கவளை(வு) ஆகும் – திருத்

ஸ்ரீ ராகம்)

9. பழுத்த முது தமிழ்ப்பலகை இருக்கும்ஒரு கவிப்புலவன்
இசைக்(கு)உருகி வரைக்குஹையை இடித்துவழி காணும் – திருத்
10. திசைக்கிரியை முதற்குலிசன் அறுத்தசிறை முளைத்த(து) என
முகட்டின் இடை பறக்கஅற விசைத்(து) அதிர ஓடும் – திருத்
11. சுடர்ப்பரிதி ஒளிப்பநில(வு) ஒழுக்கு(ம்)மதி ஒளிப்ப அலை
அடக்குதழல் ஒளிப்பஒளிர் ஒளிப்பிரபை வீசும் – திருத்

12. தனித்துவழி நடக்கும்என(து) இடத்தும்ஒரு வலத்தும் இரு
புறத்தும் அரு(கு) அடுத்(து) இரவு பகற்றுணைய(து) ஆகும் – திருத்

(பைரவி)

13. பசித்(து) அலகை முசித்(து)அழுது முறைப்படுதல் ஒழித்(து) அவுணர்
உரத்(து)உதிர நிணத்தசைகள் புஜிக்கஅருள் நேரும் – திருத்

14. திரைக்கடலை உடைத்துநிறை புனற்கடிது குடித்(து) உடையும்
உடைப்(பு)அடைய அடைத்(து)உதிரம் நிறைத்துவிளை யாடும் – திருத்

15. ஸுரர்க்கு(ம்)முநி வரர்க்கு(ம்)மக பதிக்கும்விதி தனக்கும்ஹரி
தனக்கும்நரர் தமக்கும்உறும் இடுக்கண்வினை சாடும் – திருத்

16. சலத்துவரும் அரக்கர்உடல் கொழுத்துவளர் பெருத்தகுடர்
சிவத்ததொடை எனச்ஸிகையில் விருப்பமொடு சூடும் – திருத்

(தந்யாஸி)

17. ஸுரர்க்கு(ம்) முநி வரர்க்கு(ம்) மக பதிக்கும்விதி தனக்கும்ஹரி
தனக்கும் நரர் தமக்கும்உறும் இடுக்கண்வினை சாடும் – திருத்

18. சலத்துவரும் அரக்கர்உடல் கொழுத்துவளர் பெருத்தகுடர்
சிவத்ததொடை எனச்ஸிகையில் விருப்பமொடு சூடும் – திருத்

19. பசித்(து)அலகை முசித்(து)அழுது முறைப்படுதல் ஒழித்(து) அவுணர்
உரத்(து)உதிர நிணத்தசைகள் புஜிக்கஅருள் நேரும் – திருத்

20. திரைக்கடலை உடைத்துநிறை புனற்கடிது குடித்(து) உடையும்
உடைப்(பு)அடைய அடைத்(து)உதிரம் நிறைத்துவிளை யாடும் – திருத்

(கல்யாணி)

21. சுடர்ப்பரிதி ஒளிப்பநில(வு) ஒழுக்கு(ம்) மதி ஒளிப்பஅலை
அடக்குதழல் ஒளிப்பஒளிர் ஒளிப்பிரபை வீசும் – திருத்

22. தனித்துவழி நடக்கும்என(து) இடத்தும்ஒரு வலத்தும்இரு
புறத்தும்அரு(கு) அடுத்(து) இரவு பகற்றுணைய(து) ஆகும் – திருத்

23. பழுத்த முது தமிழ்ப்பலகை இருக்கும்ஒரு கவிப்புலவன்
இசைக்(கு)உருகி வரைக்குஹையை இடித்துவழி காணும் – திருத்

24. திஸைக்கிரியை முதற்குலிஸன் அறுத்தசிறை முளைத்த(து)என
முகட்டின்இடை பறக்கஅற விசைத்(து)அதிர ஓடும் – திருத்

காபி)

25. துதிக்கும்அடி யவர்க்(கு)ஒருவர் கெடுக்க இடர் நினைக்கின்அவர்
குலத்தைமுதல் அறக்களையும் எனக்(கு)ஓர்துணை ஆகும் – திருத்

26. தலத்தில்உள கணத்தொகுதி களிப்பின்உண வழைப்ப(து)என
மலர்க்கமல கரத்தின்முனை விதிர்க்கவளை(வு) ஆகும் – திருத்

27. பணைக்கைமுக படக்கரட மதத்தவள கஜக்கடவுள்
பதத்(து)இடு(ம்)நி களத்துமுளை தெறிக்கவரம் ஆகும் – திருத்

28. சினத்(து) அவுணர் எதிர்த்தரண களத்தில்வெகு குறைத்தலைகள்
சிரித்(து)எயிறு கடித்துவிழி விழித்(து) அலற மோதும் – திருத்

தோடி)

29. சொலற்(கு)அரிய திருப்புகழை உரைத்தவரை அடுத்தபகை
அறுத்(து)எறிய உறுக்கிஎழு(ம்) மறத்தைநிலை காணும் – திருத்
30. தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி தரித்தமுடி
படைத்தவிறல் படைத்த இறை கழற்குநிகர் ஆகும் – திருத்
31. பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்தநகை கறுத்தகுழல்
சிவத்தஇதழ் மறச்சிறுமி விழிக்குநிகர் ஆகும் – திருத்
32. திருத்தணியில் உதித்(து)அருளும் ஒருத்தன்மலை விருத்தன்என(து)
உளத்தில்உறை கருத்தன்மயில் நடத்துகுஹன் வேலே – திருத்

பூர்வகல்யாணி)

33. தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி தரித்தமுடி
படைத்தவிறல் படைத்தஇறை கழற்குநிகர் ஆகும் – திருத்
34. சொலற்(கு)அரிய திருப்புகழை உரைத்தவரை அடுத்தபகை
அறுத்(து)எறிய உறுக்கிஎழு(ம்) மறத்தைநிலை காணும் – திருத்
35. திருத்தணியில் உதித்(து)அருளும் ஒருத்தன்மலை விருத்தன்என(து)
உளத்தில்உறை கருத்தன்மயில் நடத்துகுஹன் வேலே – திருத்

36. பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்தநகை கறுத்தகுழல்
சிவத்தஇதழ் மறச்சிறுமி விழிக்குநிகர் ஆகும் – திருத்

பெஹாக்)

37. தலத்தில்உள கணத்தொகுதி களிப்பின்உண வழைப்ப(து) என
மலர்க்கமல கரத்தின்முனை விதிர்க்கவளை(வு) ஆகும் – திருத்

38. துதிக்கும்அடி யவர்க்(கு)ஒருவர் கெடுக்க இடர் நினைக்கின்அவர்
குலத்தைமுதல் அறக்களையும் எனக்(கு)ஓர்துணை ஆகும் – திருத்

39. சினத்(து)அவுணர் எதிர்த்தரண களத்தில்வெகு குறைத்தலைகள்
சிரித்(து)எயிறு கடித்துவிழி விழித்(து)அலற மோதும் – திருத்

40. பனைக்கைமுக படக்கரட மதத்தவள கஜக்கடவுள்
பதத்(து) இடு(ம்)நி களத்துமுளை தெறிக்கவரம் ஆகும் – திருத்

பேகடா)

41. தனித்துவழி நடக்கும்என(து) இடத்தும்ஒரு வலத்தும்இரு
புறத்தும்அரு(கு) அடுத்(து) இரவு பகற்றுணைய(து) ஆகும் – திருத்

42. சுடர்ப்பரிதி ஒளிப்பநில(வு) ஒழுக்கு(ம்)மதி ஒளிப்ப அலை
அடக்குதழல் ஒளிப்பஒளிர் ஒளிப்பிரபை வீசும் – திருத்

43. திசைக்கிரியை முதற்குலிசன் அறுத்தசிறை முளைத்த(து)என
முகட்டின்இடை பறக்கஅற விசைத்(து) அதிர ஓடும் – திருத்

44. பழுத்த முது தமிழ்ப்பலகை இருக்கும்ஒரு கவிப்புலவன்
இசைக்(கு)உருகி வரைக்குஹையை இடித்துவழி காணும் – திருத்

காம்போதி)

45. சலத்துவரும் அரக்கர்உடல் கொழுத்துவளர் பெருத்தகுடர்
சிவத்ததொடை எனச்ஷிகையில் விருப்பமொடு சூடும் – திருத்
46. ஸுரர்க்கு(ம்)முநி வரர்க்கு(ம்)மக பதிக்கும்விதி தனக்கும்ஹரி
தனக்கும்நரர் நமக்கும்உறும் இடுக்கண்வினை சாடும் – திருத்
47. திரைக்கடலை உடைத்துநிறை புனற்கடிது குடித்(து)உடையும்
உடைப்(பு)அடைய அடைத்(து) உதிரம் நிறைத்துவிளை யாடும் – திருத்
48. பசித்(து)அலகை முசித்(து) அழுது முறைப்படுதல் ஒழித்(து)அவுணர்
உரத்(து)உதிர நிணத்தசைகள் புஜிக்கஅருள் நேரும் – திருத்

ஆநந்தபைரவி)

49. திரைக்கடலை உடைத்துநிறை புனற்கடிது குடித்(து)உடையும்
உடைப்(பு)அடைய அடைத்(து)உதிரம் நிறைத்துவிளை யாடும் – திருத்
50. பசித்(து)அலகை முசித்(து)அழுது முறைப்படுதல் ஒழித்(து) அவுணர்
உரத்(து)உதிர நிணத்தசைகள் புஜிக்கஅருள் நேரும் – திருத்
51. சலத்துவரும் அரக்கர்உடல் கொழுத்துவளர் பெருத்தகுடர்
சிவத்ததொடை எனச்ஷிகையில் விருப்பமொடு சூடும் – திருத்

52. ஸுரர்க்கு(ம்)முநி வரர்க்கு(ம்)மக பதிக்கும்விதி தனக்கும்ஹரி
தனக்கும்நரர் தமக்கும்உறும் இடுக்கண்வினை சாடும் – திருத்

மோஹநம்)

53. திசைக்கிரியை முதற்குலிசன் அறுத்தசிறை முளைத்த(து)என
முகட்டின் இடை பறக்கஅற விசைத்(து)அதிர ஓடும் – திருத்
54. பழுத்த முது தமிழ்ப்பலகை இருக்கும்ஒரு கவிப்புலவன்
இசைக்(கு)உருகி வரைக்குஹையை இடித்துவழி காணும் – திருத்
55. தனித்துவழி நடக்கும்என(து) இடத்தும்ஒரு வலத்தும்இரு
புறத்தும்அரு(கு) அடுத்(து) இரவு பகற்றுணைய(து) ஆகும் – திருத்
56. சுடர்ப்பரிதி ஒளிப்பநில(வு) ஒழுக்கு(ம்) மதி ஒளிப்ப அலை
அடக்குதழல் ஒளிப்பஒளிர் ஒளிப்பிரபை வீசும் – திருத்

கானடா)

57. சினத்(து)அவுணர் எதிர்த்தரண களத்தில்வெகு குறைத்தலைகள்
சிரித்(து)எயிறு கடித்துவிழி விழித்(து) அலற மோதும் – திருத்
58. பனைக்கைமுக படக்கரட மதத்தவள கஜக்கடவுள்
பதத்(து) இடு(ம்)நி களத்துமுளை தெறிக்கவரம் ஆகும் – திருத்
59. தலத்தில்உள கணத்தொகுதி களிப்பின்உண வழைப்ப(து)என
மலர்க்கமல கரத்தின்முனை விதிர்க்கவளை(வு) ஆகும் – திருத்

60. துதிக்கும்அடி யவர்க்(கு) ஒருவர் கெடுக்கஇடர் நினைக்கின்அவர்
குலத்தைமுதல் அறக்களையும் எனக்(கு) ஒர்துணை ஆகும் – திருத்

ஸாவேரி)

61. திருத்தணியில் உதித்(து)அருளும் ஒருத்தன்மலை விருத்தன்என(து)
உளத்தில்உறை கருத்தன்மயில் நடத்துகுஹன் வேலே – திருத்

62. பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்தநகை கறுத்தகுழல்
சிவத்தஇதழ் மறச்சிறுமி விழிக்குநிகர் ஆகும் – திருத்

63. தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி தரித்தமுடி
படைத்தவிறல் படைத்தஇறை கழற்குநிகர் ஆகும் – திருத்

64. சொலற்(கு) அரிய திருப்புகழை உரைத்தவரை அடுத்தபகை
அறுத்(து)எறிய உறுக்கிஎழு(ம்) மறத்தைநிலை காணும் – திருத்

திருத்தணியில் உதித்(து) அருளும் ஒருத்தன்மலை விருத்தன்என(து)
உளத்தில் உறை கருத்தன்மயில் நடத்துகுஹன் வேலே (9)

(முடிவில் இந்த அடியையே 10 முறை ரஞ்ஜநி ராகத்திலும்,
10முறை ஸுரடி ராகத்திலும் ஓதவும்)
வேலும் மயிலும் சேவலும் துணை (6 முறை ஓதவும்)

**கோளறு பாடல் (கந்தர் அந்தாதி - கட்டளைக் கலித்துறை)**

ஶங்கராபரணம்) **செந்திலாய்! என்பார் நொந்திடார் கோள்களால்** (ஶூத்தாங்கம்

10 சேயவன் புந்தி வநவாஸ மாதுடன் சேர்ந்தசெந்தில்
சேய!வன் (பு)உந்(து) இகல்நிஶாச ராந்தக! சேந்த! என்னில்
சேயவன் புந்தி பனிப்பாநு வெள்ளிபொன் செங்கதிரோன்
சேயவன் புந்தி தடுமாற வேதரும் சேதம் இன்றே. (10)

வேலும் மயிலும் சேவலும் துணை (6 முறை ஓதவும்)

7

**கந்தர் அலங்கார நூலின் பெருமை (கந்தர் அலங்காரம் - கட்டளைக் கலித்துறை)**

அடாணா) **அலங்காரம் கற்பார் கலங்கார் எதற்கும்** (ஶூத்தாங்கம்

11. சலம்காணும் வேந்தர் தமக்கும்அஞ் சார்யமன் சண்டைக்(கு) அஞ்சார்
துலங்கா நரகக் குழிஅணு கார்துஷ்ட்ட நோய் அணுகார்
கலங்கார் புலிக்கும் கரடிக்கும் யானைக்கும் கந்தன் நல்நூல்
அலங்கார நூற்றுள் ஒருகவி தான்கற்(று) அறிந்தவரே. (11)

வேலும் மயிலும் சேவலும் துணை (6 முறை ஓதவும்)

மத்யமாவதி) **பலச்ருதி (நூற்பயன்-நேரிசைவெண்பா)** (ஶூத்தாங்கம்)

12. வேல்வகுப்பைத் தந்தார் வியன்சீர் அருணகிரி
நூல் வகுப்பை மேல் தொகுத்தோர் நூலாக்கிச் – சூல்வகுப்பைச்
சாடும்வேல் மாறல்தந்தார் சச்சிதா நந்தகுரு
பாடும்வேல் மாறல் இதைப் பார். (– ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள்) (12)

வேலும் மயிலும் சேவலும் துணை (6 முறை ஓதவும்)

(வேல் மாறல் மஹாமந்த்ரம் முற்றும்)

## (பிற் சேர்க்கை) மிக முக்யமான வேண்டுகோள் திருப்புகழ்ப் பாடல்கள்

உசேனி) **கல்வியில் சிறக்க - சிவஞானம் பெற** (ஆதி

13. மதிபால்வித் தகன்ஆகி– மனதால் உத் தமன் ஆகிப்–;
பதிவாகிச் சிவஞான– பரயோகத்(து) அருள்வாயே;
நிதியே! நித் தியமே! என்– நினைவே! நற் பொருளாயோய்;
கதியே! சொற் பரவேளே– சுருவூரிற் பெருமாளே.

ஸாவேரி) **நோயற்ற வாழ்வு பெற** (ஆதி

14. இருமல் உரோகம் முயலகன் வாதம் எரிகுண நாசி விடமேநீர்–
இழிவு விடாத தலைவலி சோகை எழுகள மாலை இவையோடே;
பெருவயி(று) ஈளை எரிகுலை சூலை பெருவலி வேறும் உளநோய்கள்–
பிறவிகள் தோறும் எனைநலி யாத படிஉன தாள்கள் அருள்வாயே;

வரும்ஒரு கோடி அசுரர் பதாதி மடிய அநேக இசைபாடி—
வரும்ஒரு கால வயிரவர் ஆட வடிசுடர் வேலை விடுவோனே;
தருநிழல் மீதில் உறைமுகில் ஊர்தி தருதிரு மாதின் மணவாளா—
ஜலமிடை பூவின் நடுவினில் வீறு தணிமலை மேவு பெருமாளே.

யமுநாகல்யாணி) **இக பர ஸௌகம் பெற** (ஆதி

15. வசனம்மிக ஏற்றி மறவாதே— மனதுதுயர் ஆற்றில் உழலாதே;
இசைபயில் ஷடாக்ஷ ரம்அதாலே— இகபர ஸௌபாக்யம் அருள்வாயே;
பசுபதி சிவாக்யம் உணர்வோனே— பழநிமலை வீற்ற ருளும் வேலா;
அசுரர்கிளை வாட்டி மிகவாழ— அமரர்சிறை மீட்ட பெருமாளே.

மோஹநம்) **அகப்பொருள் - மணமாலை பெற** (ஆதி

16. நீலம்கொள் மேகத்தின் மயில்மீதே— நீவந்த வாழ்வைக்கண் டதனாலே;
மால்கொண்ட பேதைக்குன் மணம்நாறும்— மார்தங்கு தாரைத்தந்(து) அருள்வாயே;
வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே— வீரம்கொள் சூரர்க்கும் குலகாலா;
நாலந்த வேதத்தின் பொருளோனே— நான்என்று மார்தட்டும் பெருமாளே.

ஆரபி) **அகப்பொருள் - திருமணம் கைகூட** (ஆதி

17. விறல்மாரன் ஐந்து மலர்வாளி சிந்த மிகவானி(ல்) இந்து வெயில்காய—
மிதவாடை வந்து தழல்போல ஒன்ற வினைமாதர் தம்தம் வசைகூறக்;
குறவாணர் குன்றில் உறைபேதை கொண்ட கொடிதான துன்ப மயல்தீரக்—

குளிர்மாலை யின்கண் அணிமாலை தந்து குறைதீர வந்து குறுகாயோ;
மறிமான் உகந்த இறையோன் மகிழ்ந்து வழிபாடு தந்த மதியாளா—
மலைமாவு சிந்த அலைவேலை அஞ்ச வடிவேல் எறிந்த அதிதீரா;
அறிவால் அறிந்துன் இருதாள் இறைஞ்சும் அடியார் இடைஞ்சல் களைவோனே—
அழகான செம்பொன் மயில்மேல் அமர்ந்து அலைவாய் உகந்த பெருமாளே.

## மக்கட் பேறு பெற

(ஆதி மத்யமாவதி)

18. ஜெகமாயை உற்றென் அகவாழ்வில் வைத்த திருமாது கெர்ப்பம் உடல்ஊறித்—
தெசமாதம் முற்றி வடிவாய் நிலத்தில் ஸ்திரமாய் அளித்த பொருள்ஆகி;
மகவாவின் உச்சி விழிஆ நநத்தில் மலைநேர் புயத்தில் உறவாடி—
மடிமீத டுத்து விளையாடி நித்தம் மணிவாயின் முத்தி தரவேணும்;
முகமாயம் இட்ட குறமாதி னுக்கு முலைமேல் அணைக்க வரு(ம்)நீதா—
முதுமா மறைக்குள் ஒருமா பொருட்குள் மொழியே உரைத்த குருநாதா;
தகையா தெனக்குன் அடிகாண வைத்த தனிஏர கத்தின் முருகோனே—
தருகா விரிக்கு வடபாரி சத்தில் சமர்வேல் எடுத்த பெருமாளே.

## பகையற்ற வாழ்வு பெற

(ஆதி செஞ்சுருட்டி)

19. சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்கும் செகுத்தவர் உயிர்க்கும் சினமாகச்—
சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும் திருப்புகழ் நெருப்பென்(று) அறிவோம்யாம்;
நினைத்ததும் அளிக்கும் மனத்தையும் உருக்கும் நிசிக்கரு அறுக்கும் பிறவாமல்—
நெருப்பையும் எரிக்கும் பொருப்பையும் இடிக்கும் நிறைப்புகழ் உரைக்கும் செயல்தாராய்;

தனத்தன தனத்தந் திமித்திமி திமித்திந் தகுத்தகு தகுத்தந் தனபேரி—
தடுட்டுடு டுடுட்டுண் டெனத்துடி முழக்கும் தளத்துடன் நடக்கும் கொடுசூர்;
சினத்தையும் உடற்சங் கரித்தமலை முற்றும் சிரித்தெரி கொளுத்தும் கதிர்வேலா—
தினைக்கிரி குறப்பெண் தனத்தினில் சுகித்தெண் திருத்தணி இருக்கும் பெருமாளே.

நாட்டை) **கந்தர் அலங்காரம் (கட்டளைக் கலித்துறை)** (ஸூத்தாங்கம்

**சேவல்வேல் மயில்மெய்க் காவல்எப் போதும்**

20. ஓலையும் தூதரும் கண்டுதிண் டாடல் ஒழித்தெனக்குக்
காலையும் மாலையும் முன்நிற்கு மே!கந்த வேள் மருங்கிற்
சேலையும் கட்டிய சீராவும் கையில் சிவந்த செச்சை
மாலையும் சேவற் பதாகையும் தோகையும் வாகையுமே.

யதுகுல காம்போதி) **வேலே துணை (நேரிசை வெண்பா)** (ஸூத்தாங்கம்

21. வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல் – வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
தொளைத்தவேல் உண்டே துணை.

– திருமுருகாற்றுப்படை வெண்பா

யதுகுல காம்போதி) **வேலாயுத ஸ்வாமி அருட்புகழ்க் கீர்த்தனை** (மிச்ரசாபு

பல்லவி

22. வேலா யுத ஸ்வாமி! வீர பராக்ரம!
சூலா யுதம் ஒத்த சூரனைக் கொன்ற சக்தி (வேலாயுத)

அநுபல்லவி

காலா யுதக் கொடியோன் கரம்தனில் வீற்றிருந்து
வேலை குடிக்கும் வேலை செய்த வெற்றி மிகுந்த (வேலாயுத)

சரணம்

மூல நட்சத்திரத் திரு மோநிகள் பாடிச்சென்ற
மூல காரண மூர்த்தி முதல்வன்கைப் பொருள்! ஆதி
மூலமே என்றழைத்த கஜத்திற்கு மோட்சம் தந்த
மாலின் மருகன் சீலன் மகிமை மிகு கொற்றவா! (வேலாயுத)

– அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்

கானடா) **நைவேத்யம் (கந்தர் அந்தாதி–கட்டளைக் கலித்துறை)** (ரூபகம்

23. தினைவேத்தி அன்புசெய் வேந்தன் பதாம்புயத் தில்பக்திபுந்
திநைவேத் தியம் உகந்(து) ஏற்றினர் மாற்றினர்; பாற்றினம்தீத்
தின்ஜவேத் தியர்நெறி செல்லாத இந்தியத் தித்தியினத்
தினைவேத் தியங்குயிர் கூற்றாரில் ஊசிடும் சீஉடம்பே.

கானடா) **கற்பூர தீபாராதனை** (ஆதி

24. மூலா நிலம்அதின் மேலே மனதுறு மோஹா டவிசுடர் தனைநாடி–
மோநா நிலைதனை நாநா வகையிலும் மோதா நெறிமுறை முதல் கூறும்;

லீலா விதம்உன தாலே கதிபெற நேமா! ரகசிய உபதேசம்—
நீடு ழிதன்நிலை வாடா மணிஒளி நீதா பலம் அது தருவாயே!
நாலா ருசிஅமு தாலே திருமறை நாலா யதுஜெப மணிமாலை—
நாடாய் தவர்இடர் கேடா! ஹரிஹரி நாரா யணர்திரு மருகோனே!
சூலா திபர்சிவ ஞானார் யமன்உதை காலார் தரவரு குருநாதா!—
தோதீ திகுதிகு தீதீ ஜெகஜெக ஜோதீ! நடம்இடு பெருமாளே!

நாதநாமக்ரியா) **நமஸ்காரம் (கந்தரலங்காரம்—கட்டளைக் கலித்துறை)** (ஸௌத்தாங்கம்

25. மைவரும் கண்டத்தர் மைந்த!கந் தா!என்று வாழ்த்தும் இந்தக்
கைவரும் தொண்டன்றி மற்றறி யேன் கற்ற கல்வியும் போய்ப்
பைவரும் கேளும் பதியும் கதறப் பழகிநிற்கும்
ஐவரும் கைவிட்டு மெய்விடும் போ(து)உன் அடைக்கலமே.

ஆரபி) **மநம் ஒருநிலைப்பட—ஆணவ அழுக்கு அகல** (ஆதி

26. நினைத்த(து) எத்தனையிற் றவறாமல்— நிலைத்த புத்தினைப் பிரியாமல்;
கனத்த தத்துவமுற்(று) அழியாமல்— கதித்த நித்தியசித்(து) அருள்வாயே;
மனித்தர் பத்தர்தமக்(கு) எளியோனே— மதித்த முத்தமிழிற் பெரியோனே;
செனித்த புத்திரரிற் சிறியோனே— திருத்த ணிப்பதியிற் பெருமாளே.

**திருப்புகழ் பாடல் மகுட அடிகள் (வேண்டுகோள்கள்)**

27—1. திருத்தணியில் உதித்தருளும் ஒருத்த! மலை விருத்த! என(து)

உளத்தில்உறை கருத்த!மயில் நடத்துகுஹ! (நின்)
வேலும் மயிலும் நினைந்தவர் தம்துயர் தீர அருள்தரு கந்த! நின் அருள்தாராய்!

27–2. பணியும் அடியார் சிந்தை மெய்ப்பொருள் அதாக நவில்
ஶரவணபவா! நின் அருள்தாராய்!

27–3. தலை அறிவி லேனைநெறி நிற்கநீ தீக்ஷை தரவேணும்!

27–4. அடியவர் இச்சையில் எவைஎவை உற்றன
அவைதரு வித்(து)அருள் பெருமாளே! நின் அருள்தாராய்!

27–5. வேண்டிய போ(து) அடியர் வேண்டிய போகம் அது
வேண்டவெ றா(து) உதவு பெருமாளே! நின் அருள்தாராய்!

27–6. வேண்டும் அடியர் புலவர் வேண்ட அரிய பொருளை
வேண்டும் அளவில் உதவும் பெருமாளே! நின் அருள்தாராய்!

27–7. ஶிவம்ஆர் திருப்புகழை எனுநாவி னிற்புகழ
ஶிவக்ஞாந ஸித்திதனை அருள்வாயே!

27–8. கலியாண ஸுபுத்திர னாக குறமாது தனக்கு விநோத
கவின் ஆரு புயத்தில் உலாவி விளையாடிக்
களிகூரும் உனைத்துணை தேடும் அடியேனை ஸுகப்பட வேவை!
கடன் ஆகும் இதுக்கநம் ஆகு(ம்) முருகோனே!

பலகாலும் உனைத்தொழு வோர்கள் மறவாமல் திருப்புகழ் கூறி
படிமீது துதித்(து) உடன் வாழ அருள்வேளே!
பதியான திருத்தணி மேவு ஶிவலோகம் எனப்பரி வேறு
பவரோக வயித்திய நாத பெருமாளே!
பவரோக வயித்திய நாத பெருமாளே !
சலமான பயித்தியம் ஆகி தடுமாறித்
தவியாமல் பிறப்பையும் நாடி அதுவேரை அறுத்(து) உனை ஒதி
தலமீதில் பிழைத்திட வேநின் அருள்தாராய்!

27–9. ஆபத்தில் அஞ்சல் என்ற பெருமாளே! நின் அருள்தாராய்!

27–10. ஸகலதுக் கமும் அறச் சகலஸற் குணம்வரத்
தரணியிற் புகழ்பெறத் தகைமைபெற்(று) உனதுபொற்
சரணம்எப் பொழுது(ம்)நட் பொடுநினைத் திடஅருட் டருவாயே!

27–11. நினைத்த காரியம் அநுக்கூல மேபுரி பெருமாளே! நின் அருள்தாராய்

27–12. ஏழைக் (கு) இரங்கும் பெருமாளே! நின் அருள்தாராய்

27–13. ஏழைகள் வியாகுலம் இ(து) ஏ(து) என வினாஇல் உனை
ஏவர்புகழ் வார்? மறையும் என்சொலாதோ?
ஆறுமுகம் ஆனபொருள் நீஅருளல் வேண்டும்!
ஆதி "தணிகாசலம்" அமர்ந்த பெருமாளே!

27–14. வேத மூர்த்தி திருத்தணி வெற்(பு)உறை ஜோதி! கார்த்திகை பெற்ற விளக்(கு) ஒளியே!
(எங்கள்) வினைப்பகை அறுத்து, (யாங்கள்) நினைத்தது(ம்) முடித்து, (எங்கள்)
மநத்துயர் கெடுத்(து), (எனை/எங்களை) வளர்த்(து) அருள் க்ருபைக் கடலே!
ஆறுமுகம் ஆனபொருள் நீஅருளல் வேண்டும்! ஆதிதணி காசலம் அமர்ந்த பெருமாளே

27–15. "மநதாலே இறந்திட் டுப்பெற வேகதி ஆயினும் இருந்திட்டுப் பெற வேமதி ஆயினும்
இரண்டிற் றக்க(து) ஓர் ஊதியம் நீதர இசைவாயே!

27–16. நிதிபொங் கப்பல தவங்க ளால்உனை மொழியும் புத்திகள் தெரிந்து நான்உனை
நிகர்சந் தத்தமிழ் சொரிந்து பாடவும் (நின்) அருள்தாராய்!

27–17. தஞ்சம் தஞ்சம் சிறியேன்மதி கொஞ்சம் கொஞ்சம் துரையே! அருள்
தந்தென்றின் பம்தரு வீடது தருவாயே

27–18. இளமை கிழம்படுமுன் பதம்பெற உணர்வேனோ

27–19. என்றென்றும் தொண்டு செயும்படி அருள்வாயே.

27–20. அமலம் ஆகிய சிந்தை அடைந்தகல் தொலைவி லாத அறம் பொருள் இன்பமும்
அடைய ஓதி உணர்ந்து தணந்தபின் அருள்தானே
அறியு மாறு பெறும்படி அன்பினின் இனிய நாத சிலம்பு புலம்பிடும்
அருண ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்

27–21. திருவளர் செந்தூர்க் கந்தப் பெருமாளே, (அடியேன்)
படுதுயர் கண்பார்த் தன்புற் றருளாயோ

27–22 நான், தட்டழியாது திருப்புகழ் கற்கவும், ஓதவும், முத்தமிழ்
தத்துவ ஞானம் எனக்கருள் புரிவாயே.

### தெய்வ வாழ்த்து (கந்த புராணம்–அறுசீர் விருத்தம்)

28. ஆறிரு தடந்தோள் வாழ்க, அறுமுகம் வாழ்க, வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க, குக்குடம் வாழ்க, செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க, யானைதன் அணங்கு வாழ்க,
மாறிலா வள்ளி வாழ்க, வாழ்க,சீர் அடியார் எல்லாம்.

### உலக வாழ்த்து (கந்த புராணம்–அறுசீர் விருத்தம்)

29. வான்முகில் வழாது பெய்க, மலிவளம் சுரக்க, மன்னன்
கோன்முறை அரசு செய்க, குறைவிலா(து) உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க, நல்தவம் வேள்வி மல்க,
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலகம் எல்லாம்.

### எல்லாப் பிழைகளையும் பொறுக்க வேண்டல் (கட்டளைக் கலித்துறை)

30. கல்லாப் பிழையும், கருதாப் பிழையும், கசிந்(து)உருகி
நில்லாப் பிழையும், நினையாப் பிழையும், நின் ஆறெழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப் பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்! வள்ளி–ஈச்வரனே! (பட்டினத்தார் பாடலைத் தழுவியது)

வெற்றிவேற் குமானுக்கு ஹர ஹரோ ஹரா – முருகன் அடியார்களுக்கு ஹர ஹரோ ஹரா

(வேல் மாறல் பாராயண நிறைவுப் பகுதி முற்றும்)

# வேல் வகுப்பு

(ஸ்ரீ அருணகிரி நாத ஸ்வாமிகள் அருளியது)

*தனத்ததன தனத்ததன தனத்ததன தனத்ததன*
*தனத்ததன தனத்ததன தனத்ததன தானம்*

1. பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்தநகை கறுத்தகுழல்
சிவத்தஇதழ் மறச்சிறுமி விழிக்குநிகர் ஆகும்
2. பனைக்கைமுக படக்கரட மதத்தவள கஜக்கடவுள்
பதத்திடு(ம்)நி களத்துமுளை தெறிக்கவரம் ஆகும்
3. பழுத்தமுது தமிழ்ப்பலகை இருக்கும்ஒரு கவிப்புலவன்
இசைக்(கு)உருகி வரைக்குஹையை இடித்துவழி காணும்
4. பசித்(து)அலகை முசித்(து)அழுது முறைப்படுதல் ஒழித்(து)அவுணர்
உரத்(து)உதிர நிணத்தசைகள் புஜிக்கஅருள் நேரும்
5. ஸுரர்க்கு(ம்)முநி வரர்க்கு(ம்)மக பதிக்கும்விதி தனக்கும்ஹரி
தனக்கும்நரர் தமக்கும் உறும் இடுக்கண்வினை சாடும்
6. சுடர்ப்பரிதி ஒளிப்பநில(வு) ஒழுக்கு(ம்)மதி ஒளிப்பஅலை
அடக்குதழல் ஒளிப்பஒளிர் ஒளிப்பிரபை வீசும்
7. துதிக்கும்அடி யவர்க்(கு)ஒருவர் கெடுக்கஇடர் நினைக்கின்அவர்
குலத்தைமுதல் அறக்களையும் எனக்(கு)ஓர்துணை ஆகும்
8. சொலற்(கு)அரிய திருப்புகழை உரைத்தவரை அடுத்தபகை
அறுத்(து)எறிய உறுக்கிஎழு(ம்) மறத்தைநிலை காணும்

9. தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி தரித்தமுடி
படைத்தவிறல் படைத்த இறை கழற்குநிகர் ஆகும்
10. தலத்தில்உள கணத்தொகுதி களிப்பின்உண வழைப்ப(து)என
மலர்க்கமல கரத்தின்முனை விதிர்க்கவளை(வு) ஆகும்
11. தனித்துவழி நடக்கும்என(து) இடத்தும்ஒரு வலத்தும்இரு
புறத்தும்அரு(கு) அடுத்(து)இரவு பகற்றுணைய(து) ஆகும்
12. சலத்துவரும் அரக்கர்உடல் கொழுத்துவளர் பெருத்தகுடர்
சிவத்ததொடை எனச்ஸிகையில் விருப்பமொடு சூடும்
13. திரைக்கடலை உடைத்துநிறை புனற்கடிது குடித்(து)உடையும்
உடைப்(பு)அடைய அடைத்(து)உதிரம் நிறைத்துவிளை யாடும்
14. திஸைக்கிரியை முதற்குலிஸன் அறுத்தசிறை முளைத்த(து)என
முகட்டின்இடை பறக்கஅற விசைத்(து) அதிர ஓடும்
15. சினத்(து)அவுணர் எதிர்த்தரண களத்தில்வெகு குறைத்தலைகள்
சிரித்(து)எயிறு கடித்துவிழி விழித்(து)அலற மோதும்
16. திருத்தணியில் உதித்(து)அருளும் ஒருத்தன்மலை விருத்தன்என(து)
உளத்தில்உறை கருத்தன்மயில் நடத்துகுஹன் வேலே

## வேல் மாறல் பாடல்களின் உரைப்பகுதி (ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் எழுதியது)

### 1. வேல் மாறலுக்கு மூலமான வேல் வகுப்பின் பத உரை

| | | | |
|---|---|---|---|
| அடி 16 | திருத்தணியில் | – | திருத்தணிகை மலையில் |
| | உதித்து | – | தோன்றி விளக்கமாய் இருந்து |

| | | |
|---|---|---|
| | அருளும் | – திருவருள் செய்கின்ற |
| | ஒருத்தன் | – ஒப்பில்லாத பெருமானும் |
| | மலை விருத்தன் | – (மலைக் கிழவன்) மலைகட்கு உரியவன் ஆகும் குன்றுதோறாடும் குமரனும் |
| | எனது உளத்தில் | – என்னுடைய மநத்தில் |
| | உறை கருத்தன் | – வீற்றிருக்கும் திருவுள்ளம் உடையவனும் (அல்லது கர்த்தன் –யஜமாநனும்) |
| | மயில் நடத்து குஹன் | – மயிலையே வாஹநமாகச் செலுத்துகின்ற குஹப் பெருமானும் ஆன ஞாந ஶக்தி தரனுடைய |
| | வேலே | – வேலாயுதம் தான் (ஶக்த்யாயுதமே) |
| அடி 1 | பருத்த முலை | – பெருத்த திருத் தநபாரங்களையும் |
| | சிறுத்த இடை | – சிறிய இடுப்பையும் |
| | வெளுத்த நகை | – வெள்ளைப் பல்வரிசையையும் |
| | கறுத்த குழல் | – கரிய கூந்தலையும் |
| | சிவத்த இதழ் | – சிவந்த வாய்இதழ்களையும் உடையவளான |
| | மறச் சிறுமி விழிக்கு | – குறவர் குலத்துச் சிறு பெண்ணாம் வள்ளி நாயகியின் திருக்கண்களுக்கு |
| | நிகர் ஆகும் | – ஒப்பாய் இருக்கும். (துணிகைக் குஹன் வேல்) |
| அடி 2 | பனைக்கை | – பனைமரம் போல நீண்ட தும்பிக்கையை உடையதும் |
| | முகபட | – (முகபடாம்) முக அலங்காரத் துணி அணிந்துள்ளதும் |

கரட மத – மதம் பாய்கின்ற சுவட்டினின்றும் ஒழுகுகின்ற மதநீரை உடையதும்

தவள – வெள்ளை நிறம் கொண்டதும் ஆன

கஜக்கடவுள் – ஐராவதமாம் யானையை உடைய தேவர் குலத் தலைவனான தேவேந்த்ரனின்

பதத்து இடு – பாதங்களில் (ஶூர பத்மன்) இட்ட

நிகளத்து முளை – விலங்கின் பூட்டை

தெறிக்க – ஒடித்து எறிவதற்கு

அரம் ஆகும் – ரம்பமாக இருந்து உதவும் (அல்லது)

வரம் ஆகும் – வரம் கொடுப்பதாகும் (குணிகைக் குஹன் வேல்)

அடி 3 பழுத்த – அநுபவத்தால் முதிர்ச்சி அடைந்தவரான

முது தமிழ்ப்பலகை – பழைய முத்தமிழ் ஸங்கப் பலகையில்

இருக்கும் – (தலைமைப் பதவியில்) வீற்றிருந்த

ஒரு கவிப்புலவன் – ஒப்பில்லாத (திரு முருகாற்றுப் படைக்) கவியைப் பாட வல்ல புலவர் பெருமானாம் நக்கீரரின்

இசைக்கு – சொல்லுக்கு அல்லது இன்னிசையுடன் ஒதப் பெற்ற 'திருமுருகாற்றுப்படை' என்னும் நல்ல நூலுக்கு

உருகி – உள்ளம் நெகிழ்ந்து

வரைக்குஹையை – (கற்கி முகி என்னும் குதிரை முகப் பெண் பூதத்தால் அவர் அடைக்கப் பட்டிருந்த) மலைக் குஹையின் வாயிலை

இடித்து – இடித்துப் பொடிபடுத்தி

| | | | |
|---|---|---|---|
| | வழி காணும் | – | வாயிலைத் திறந்து வழிகாட்டி விடுதலை பெற வைத்தது. (துணிகைக் குஹன் வேல்) |
| அடி 4 | பசித்து | – | பசியால் வருத்தம் உற்று |
| | அலகை | – | பிசாசுக் கூட்டங்கள் |
| | முசித்து | – | இளைத்துப் போய் |
| | அழுது முறைப்படுதல் | – | (உணவை விரும்பி) அழுது அழுது முறையிடுவதை |
| | ஒழித்து | – | போக்கி (முறையிடலை நிறுத்தி) |
| | அவுணர் உரத்து | – | அஸுரர்களின் மார்பிலிருந்து ஒழுகும் |
| | உதிரம் | – | ரத்தத்தை (அருந்தும்படி) யும் |
| | நிணத் தசைகள் | – | கொழுப்பு நிறைந்த சதைகளையும் (அந்தப் பேய் இனத்துக்கு) |
| | புஜிக்க | – | உண்ணுவதற்கும் |
| | அருள் நேரும் | – | திருவருள் புரியும்; கொடுக்கும். (துணிகைக் குஹன் வேல்) |
| அடி 5 | ஸுரர்க்கும் | – | வானவர்களுக்கும் |
| | முநிவரர்க்கும் | – | முநி ஶ்ரேஷ்டர்களுக்கும் |
| | மகபதிக்கும் | – | யாகங்களின் தலைவனான தேவேந்த்ரனுக்கும் |
| | விதி தனக்கும் | – | யாவர்க்கும் தலைவிதியை விதிக்கும் ப்ரம்ம தேவனுக்கும் |
| | ஹரி தனக்கும் | – | விஷ்ணுவிற்கும் |
| | நரர் தமக்கும் | – | மானிடர்களுக்கும் |
| | உறும் இடுக்கண் | – | உண்டாகின்ற இடர்களையும் |

| | | |
|---|---|---|
| | வினை | – (பூர்வ ஜந்ம கர்மத்தால் விளையும்) ) தீமைகளையும் |
| | சாடும் | – ஒழித்து அழிவு செய்யும் (துணிகைக் குஹன் வேல்) |
| அடி 6 | சுடர்ப் பரிதி | – கிரணங்களோடு கூடிய ஸூர்யன் |
| | ஒளிப்ப | – (இந்தவேலின் ப்ரகாஶத்திற்குமுன் நம் ப்ரகாஶம் எம்மாத்ரம் என்று பயந்து) ஒளிந்து மறையவும் |
| | நிலவு ஒழுக்கும் மதி | – குளிர்ந்த வெண்ணிலவைக் கொட்டும் சந்த்ரனும் |
| | ஒளிப்ப | – (அவ்வாறே) ஒளித்துக்கொண்டு மறைந்துவிடவும் |
| | அலை அடக்கு தழல் | – ஸமுத்ர ஜலத்தை அடக்கி ஆளும் நெருப்பாகிற வடவாமுக அக்நியும் |
| | ஒளிப்ப | – (அவ்வண்ணமே) ஓடி ஒளியவும் |
| | ஒளிர் ஒளி ப்ரபை | – (ஸூர்யனைப் போல்) ப்ரகாஶிக்கின்ற (சந்த்ரனைப் போன்ற) நிலவொளியைக் கொண்ட (படபாமுகாக்நியைப் போன்ற) பேரொளியை |
| | வீசும் | – (எங்கும் நிறையப்) பரப்பும் (துணிகைக் குஹன் வேல்) |
| அடி 7 | துதிக்கும் அடியவர்க்கு | – ஸ்தோத்திரம் சொல்லி வழிபடும் பக்தர்களுக்கு |
| | ஒருவர் கெடுக்க | – யாரேனும் ஒருவர் கெடுதல் செய்ய |
| | இடர் நினைக்கின் | – இடையூறு நினைத்தால் |
| | அவர் குலத்தை | – (அங்ஙனம் தீமை நினைத்த) அந்தத் தீயவர்களுடைய வம்ஶத்தையே |
| | முதல் அற | – மூல வேரோடு அழியும்படி |

| | | | |
|---|---|---|---|
| | களையும் | – | மாய்த்து ஒழிக்கும் ; (துணிகைக் குஹன் வேல்) |
| | எனக்கு | – | அடியேனுக்கு |
| | ஓர் துணை ஆகும் | – | ஒப்பில்லாத சிறந்த பெருந்துணையாக இருக்கும் (துணிகைக் குஹன் வேல்) |
| அடி 8 | சொலற்கு அரிய | – | சொல்லுவதற்கு அருமையான (பேச்சுக்கு அடங்காத பெரும் புகழ் கொண்ட) |
| | திருப்புகழை | – | (முருகவேளின் அரிய பெரிய தெய்வத் தன்மை வாய்ந்த) திருப்புகழை |
| | உரைத்தவரை | – | சொன்னவர்களை |
| | அடுத்த பகை | – | வந்து நெருங்கும் பகைமைகளை |
| | அறுத்து எறிய | – | வெட்டித் தள்ள |
| | உறுக்கி எழும் | – | கோபித்துக் கொண்டு புறப்படும் (துணிகைக் குஹன் வேல்) |
| | அறத்தை நிலை காணும் | – | தர்மத்தை நிலை நிறுத்தும் (அல்லது) |
| | மறத்தை நிலை காணும் | – | வீரத்தை நிலை நாட்டும் (துணிகைக் குஹன் வேல்) |
| அடி 9 | தருக்கி நமன் | – | அஹம்பாவம் கொண்டு யம தேவன் |
| | முருக்க வரின் | – | கொல்ல வந்தால் |
| | எருக்கு மதி | – | எருக்கம் பூவையும், பிறைச் சந்த்ரனையும் |
| | தரித்த முடி படைத்த | – | சூடியுள்ள ஜடையை உடையவரும் |
| | விறல் படைத்த | – | வீரவெற்றி கொண்டவரும் ஆன |
| | இறை | – | தெய்வமாம் ஶிவ பெருமானுடைய |

சுழற்கு – (மார்க்கண்டேயன் பொருட்டு முன்பு யமனை உதைத் தருளிய அந்தத்) திருவடிக்கு
நிகர் ஆகும் – ஸமமாயிருந்து உதவி செய்யும். (துணிகைக் குஹன் வேல்)

அடி 10 தலத்தில் உ(ள்)ள – (பூதலத்தில்) உலகில் உள்ள
கணத் தொகுதி – ஜீவ ராஸிகள் எல்லாம்
களிப்பின் – மகிழும் படிக்குச்
உணவு அழைப்பது என – சாப்பாட்டை வரவழைக்க வேண்டி வருமானால்
மலர்க் கமல கரத்தின் – செந்தாமரைப் பூப்போன்ற (முருகவேள்) திருக் கையில் இருந்த வண்ணமே
முனை விதிர்க்க – (தன் மேல் பக்கத்து) நுனியை அசைத்த அந்த அளவிலேயே
வளைவு ஆகும் – (உணவுப் பண்டங்கள் அனைத்தையும்) சுற்றி வளைத்துக் கொணர்ந்து சேர்த்தருளும். (துணிகைக் குஹன் வேல்)

(அல்லது)

தலத்தில் உ(ள்)ள – யுத்தகளத்தில் இருந்த
கணத் தொகுதி – பூதப்ரேத பைஶாஶக் கூட்டங்களை
களிப்பின் உ(ண்)ண – மகிழ்ந்து சாப்பிடுவதற்கு ('வருக' என்று)
அழைப்பது என – (வருந்திக்) கூப்பிடுவது போலத் (தோன்றும் படியாக)
மலர்க் கமலகரத்தின் – செழும் தாமரை மலர் அனைய திருக்கையினால் முனை விதிர்க்க (தனது) மேல் நுனிப் பகுதியைக் (குமரவேள்) அசைக்கவும்

| | | | |
|---|---|---|---|
| | வளைவு ஆகும் | – | வளைந்து கொடுத்து ஆடி அழைக்கும் (துணிகைக் குஹன் வேல்) |
| அடி 11 | தனித்து | – | (ஒருவரும் துணை இன்றித்) தனிமையாக |
| | வழி நடக்கும் | – | வழி நடை கொள்ளும் |
| | எனது இடத்தும் | – | என்னுடைய இடது பக்கத்திலும் |
| | ஒரு வலத்தும் | – | மறு வலப் பாகத்திலும் |
| | இரு புறத்தும் | – | முன்னேயும் பின்னேயும் ஆன இரண்டு பக்கங்களிலும் |
| | அருகு அடுத்து | – | பக்கத்திலேயே நெருங்கி இருந்து |
| | இரவு பகல் | – | ராத்ரியும் பகலும் (எப்போதும்) |
| | துணை அது ஆகும் | – | ஸஹாயம் புரிவது ஆகும். (துணிகைக் குஹன் வேல்) |
| அடி 12 | சலத்து வரும் அரக்கர் உடல் | – | மிகுந்த சினத்துடன் வந்த அஸுரர்களின் உடம்பில் |
| | கொழுத்து வளர் | – | கொழுப்படைந்து வளர்ச்சியும் அடைந்திருந்த |
| | பெருத்த குடர் | – | பெரும் குடல் (சிறு குடல் முதலானவை) களைச் |
| | சிவத்த தொடை என | – | சிவந்த (ரோஜாப்பூ அல்லது தாமரை மலர் மாலைகளைப் போல |
| | ஶிகையில் | – | (தன்) உச்சியில் (முனையில்) |
| | விருப்பமொடு சூடும் | – | ஆசையோடு பூண்டு கொள்ளும் (துணிகைக் குஹன் வேல்) |
| அடி 13 | திரைக் கடலை | – | அலைகள் நிறைந்த ஸமுத்திரத்தை |
| | உடைத்து | – | உடைப்பெடுக்கச் செய்து |

| | | | |
|---|---|---|---|
| | நிறை புனல் | – | (அக்கடலில்) நிறைந்திருந்த உப்பு நீரை |
| | கடிது குடித்து | – | வேகமாகப் பருகியும் |
| | உடையும் உடைப்பு | – | உடைந்த உடைப்புகள் எல்லாவற்றையும் |
| | அடைய அடைத்து | – | அடைபடுமாறு, முழுதும் அடைத்தும் (அந்தக் கடலில்) |
| | உதிரம் நிறைத்து | – | (நீர் வற்றிய பகுதி முழுவதும்) ராக்ஷஸர்களின் ரத்தத்தை நிரம்பச் செய்தும் |
| | விளையாடும் | – | (அதில் குளித்தும், குதித்தும், குடித்தும், களித்தும்) விளையாடல்கள் செய்யும் (துணிகைக் குஹன் வேல்) |
| அடி 14 | நிலைக் கிரியை | – | (எட்டுத்) திக்குகளில் உள்ள அஷ்ட குல பர்வதங்களை |
| | முதல் | – | முன்னாளில் |
| | குலிசன் அறுத்த சிறை | – | வஜ்ராயுதம் உடைய தேவேந்த்ரன் அறுத்துப் போட்ட சிறகுகள் (திரும்பவும் அந்த மலைகளுக்கு) |
| | முளைத்தது என | – | முளைத்து விட்டனவோ என்று எண்ணும்படியாக |
| | முகட்டின் இடை | – | அண்டங்களின் உச்சியிலே |
| | பறக்க | – | பறந்து சேரும்படி |
| | அற விசைத்து | – | நன்றாக வேகத்துடன் (திசைகளும் பூமியும்) |
| | அதிர | – | அதிர்ச்சி அடையும்படி |
| | ஓடும் | – | ஓட்டம் கொள்ளும், (துணிகைக் குஹன் வேல்) |
| அடி 15 | சினத்து அவுணர் | – | கோபித்து அரக்கர்கள் |
| | எதிர்த்த ரணகளத்தில் | – | எதிர்த்துப் போரிட வந்த போர்க்களத்தில் |

| | | |
|---|---|---|
| வெகு குறைத் தலைகள் | - | (அந்த அஸுரர்களுடைய) பல உடல் அற்ற தலைகள் (கபந்தங்கள்) |
| சிரித்து | - | சிரிப்புக் காட்டியும் |
| எயிறு கடித்து | - | பற்களை (நறநற என்று) கடித்தும் |
| விழி விழித்து | - | கண்களை (ப்பேந்தப்பேந்த) விழித்துப் பார்த்தும் |
| அலற | - | வாய்களால் கூச்சலிட்டு ஆரவாரம் செய்யவும் |
| மோதும் | - | (அவைகளை நன்கு) தாக்கும். (தணிகைக் குஹன் வேலே) |

(•வேல் வகுப்பின் பத உரை முற்றும்)

•குறிப்பு :-

இந்தத் திருவகுப்பு ஸ்ரீமத் அருணகிரிநாத ஸ்வாமிகளால் அருளிச் செய்யப் பெற்றது; இதன் தொடக்க எழுத்து "ப" ஆகவும், முடிவெழுத்து "லே" ஆகவும் அமைந்திருப்பதைக் கூட்டிப் பார்த்தால் "பலே" என வருவது இவ்வகுப்பின் பெருமையையே நமக்கு மிக நன்றாக எடுத்துக் காட்டுகின்றது. சீர்பாத வகுப்பாகிய "மணி" வகுப்பு, தேவேந்த்ர ஸங்க வகுப்பாகிய "மந்த்ர" வகுப்பு, இந்த வேல் வகுப்பாகிய "ஔஷத" வகுப்பு ஆகிய மூன்றும் மணி, மந்த்ர, ஔஷதங்களாகி மக்களின் உடல் நோயையும் உள்ள நோயையும் ஒருங்கே போக்க வல்லவை ; வேல் வகுப்பின் மருந்துத் திறமை கண்டே வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள் அவர்கள் இதனை நான்கு மடங்காகப் பெருக்கி விரித்துத் தந்து "வேல் மாறல்" எனப் பெயரிட்டு, மக்கள் உய்ய வழி வகுத்து அருளி உள்ளார்கள். வேல் மாறலில், வேல் வகுப்பின் பதினாறு அடிகளே நான்கு மடங்காகப் பெருகிவருவதும். குறிப்பாகப் பதினாறாவது அடியாகிய "திருத்தணியில்" எனத் தொடங்கும் "மஹா மந்த்ர" அடி வேல் மாறலுக்கு முன் 20 முறை, பின் 20 முறை 64 வரிகளிலும் 64 முறை 2, 32, 35, 61 வரிகள் மூலம் 4 முறை ஆக மொத்தம் (20+20+64+4 =) 108 முறை ஜபத்துக்குரிய வகையில் வருவதும் குறிப்பிடத்தக்கவை. இந்தப் பதினாறாம் அடி எழுவாய் ஆக அமைய ஒன்று முதல் பதினைந்து

வரை உள்ள அடிகள் யாவும் வரிசையாகப் பயனிலையாக வருவதால் பதினாறாம் அடிக்கு முதலில் பொருள் கூறிப் பின்னர் மற்றைப் பதினைந்து அடிகளுக்கும் இங்குப் பதவுரை தரப்பட்டுள்ளது. வேல் வகுப்பின் பொருளை உணர்ந்து கொண்டு விட்டால் வேல் மாறலின் பொருளை முழுதும் உணர்ந்த மாதிரி என்பது இதனால் சொல்லாமலே விளங்கும். பொருள் தெரியாது பாராயணம் புரியினும் வேல் மாறல் பயன் தரக்கூடியதே. ஆனாலும் பாராயணம் செய்யும் மஹா மந்த்ரத்தின் உட்பொருளையும் முழுதும் உணர்ந்து கொண்டு ஜபம் செய்யின், "பொன் மலர் நாற்றம் உடைத்து" என்ற மொழிப்படிச் சாலச் சிறந்ததாகும் என்றே ஈண்டுப் பொருள் எழுதப் பெற்றுள்ளது.

## 6. "கால் மாறி ஆடும்" - பாடலின் பொழிப்புரை

மதுரையில் ராஜசேகர பாண்டியனுக்காக இடது காலைக் கீழே ஊன்றி, வலது காலை மேலே தூக்கி, காலை மாற்றி நடனம் ஆடிய நடராஜப் பெருமானின் (கால் முளை) மைந்தனாகிய கந்தப் பெருமானின் கையில் உள்ள வேலைப் புகழ்ந்து அருணகிரிநாதர் பாடியுள்ளார். அந்த வேல் வகுப்பில் உள்ள அடிகள் மாறி மாறி வரும்படியாகத் தயக்கமின்றித் தொகுத்து வியாதிகள், பேய், பில்லி, சூனியம், போன்றவையால் வரும் கஷ்டங்களெல்லாம் பொடிப்பொடியாக ஆகுமாறு வகுத்து, அதற்கு "வேல் மாறல்" என்று பெயரிட்டார் மகாமேதையாம் வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள். அந்த அருமையான யந்த்ர மந்த்ரத்தை ஜெபிப்பதால் வரும் பயன் மிக மிக அதிகமாகும்.

## 7. "விழிக்குத் துணை" - பாடலின் பொழிப்புரை

திருச்செங்கோட்டு வேலனின் அழகிய (மங்களகரமான, செல்வமே ஆகும்) ம்ருதுவான தாமரை போன்ற சிவந்த இரு திருவடிகள் நம் இரு கண்களுக்குத் துணை, வாய்மை (ஸத்யம்) தவறிக் குறையாத பேச்சுக்குத் துணையாய் இருப்பவை "முருகா!" (குமரா! குஹா!) என்பன போன்ற அவனது திருப்பெயர்கள். முற்பிறவியில் நாம் செய்த பழி பாவச் செயல்களின் தீமைகள் நம்மைத் துன்புறுத்தாமல் நமக்குத் துணையாய் இருப்பன அந்தக் கந்தனின்

பன்னிரண்டு தோள்கள். இந்த உலகில் பயப்படத்தக்க தனியான வழிகளில் நடக்கும் போதும், (அல்லது இறந்த பின் உயிர் யமலோகத்துக்குச் செல்லும் போது உள்ள பயங்கரமான தனித்த வழியிடத்திலும்) குமரனின் கூரிய வேலாயுதமும் மயில் வாஹநமுமே நமக்குத் துணை.

## 8. "தடக்கொற்ற" - பாடலின் பொழிப்புரை

பெருமையும் வெற்றியும் உடைய கந்த வேளின் வாஹநமாம் மயிலே! குமரவேள் உன்னைத் தனியே இருக்கவிடும் பொழுதெல்லாம் வடக்கில் உள்ள இமய (மேரு) மலைக்கு அந்தப் புறத்திலும், ஏழு கடல்களுக்கும் அப்பாலும், ஸூர்ய, சந்த்ர மண்டலங்களுக்கு அப்பாலும், பொன்மயமான சக்ரவாள கிரிக்கு அப்பாலும், பத்துத் திசைகளுக்கும் அப்பாலும், நின்னுடைய தோகையை விரித்து வட்டம் இட்டுக் கொண்டே எங்களுடைய துன்பங்கள் தீர்ந்தொழியும்படித் திரிந்து கொண்டிருப்பாயாக!

## 10. "சேயவன் புந்தி" - பாடலின் பதவுரை

| | | |
|---|---|---|
| 'சேய அன்பு உந்தி | – | அழகிய இச்சையுடன், காட்டாற்றினைக் கொண்ட |
| வந வாஸ மாதுடன் | – | காட்டில் வாஸம் செய்த ஸ்த்ரீயாம் வள்ளி நாயகியுடன் |
| சேர்ந்த செந்தில் சேய! | – | கூடிக் கலந்த, திருச்செந்தூர் வாழும் குழந்தைக் குமரனே! |
| வன்பு உந்து இகல் | – | வலிமையில் உயர்ந்த, மாறுபாடுகளை உடைய |
| நிஶாசர அந்தக! சேந்த! என்னில் | – | அஸுரர் குல யமனே! சேந்தனே! என்று துதிப்பீர்களாயின் |
| சேயவன், புந்தி | – | செவ்வாய், புதன் |
| பனிப் பாநு, வெள்ளி | – | குளிர்ந்த ஸூர்யனாம் சந்த்ரன், ஶுக்ரன் |
| பொன், செங்கதிரோன் | – | வியாழன், ஸூரியன் |
| சேயவன் | – | (அந்த ஆதித்தனின் மைந்தனான) ஶநி, ராஹு மற்றும் கேது |

| | | |
|---|---|---|
| | | கேது ஆகிய நவ க்ரஹங்களின் கதிகளினால் – போக்கினால் உண்டாகும். |
| புந்தி தடுமாறவே தரும் | – | புத்தியைக் கலங்க வைக்கும் |
| சேதம் இன்று | – | கஷ்ட நஷ்டங்கள் இல்லை (ஏ – அசை) |

## 11. "சலம் காணும்" – பாடலின் பொழிப்புரை

கந்தப் பெருமானின் நல்ல நூலான கந்தர் அலங்காரப் பாடல்கள் நூறினுள் (ஏதேனும்) ஒரு செய்யுளை நன்றாய்ப் படித்து, அதன் உட்கருத்தை ஐயம் திரிபற அறிந்துள்ளவர்கள், கோபம் கொண்டுள்ள மன்னர்ளுக்கும் பயப்படார்; எம தருமன் செய்யும் சண்டைக்கு அஞ்ச மாட்டார்கள் (அல்லது) யமனோடு சண்டை செய்யவும் அஞ்சார்கள்; இருள் சூழ்ந்ததனால் விளங்குதல் இல்லாத ஏழுவகை நரகக் குழிகளை அடைய மாட்டார்கள்; மிக்க கேட்டை விளைவிக்கும் நோய்களால் பீடிக்கப்பட மாட்டார்கள்; புலி, கரடி, யானை முதலிய விலங்குகள் தாக்கினாலும் மநம் கலங்க மாட்டார்கள்.

## 12. "வேல் வகுப்பை" –பாடலின் பொழிப்புரை

அருண கிரிநாத ஸ்வாமிகள் "வேல் வகுப்பை" அருளினார். அந்த நூலின் 16 அடிகளுடன் மேலும் மும்மடங்கு அதே அடிகளைச் சேர்த்து மாற்றி மாற்றித் தொகுத்து, தொடர்ந்து வரும் மனிதப் பிறவிக்கு முடிவு கட்டும் முக்தியை நல்கும் நூல் ஒன்றினைக் குருநாதராம் வள்ளி மலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள் தந்தருளினார். அவர் தந்த "வேல் மாறல்" என்னும் அந்த நூலைப் படித்துப் பயன் பெறுங்கள்.

(வேல் மாறல் மஹா மந்த்ர உரைப்பகுதி முற்றும்)

– கபம் –

# சென்னை நங்கைநல்லூர்ப் பொங்கி மடாலயம்

வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் சிஷ்யரும், திருப்போரூர் முருகன் திருவருள் பெற்றவரும், ஆசு கவிகள் பாடும் அருட்கவியும் ஆன சேதுராமனார், கீலக வருஷம், சிவராத்திரி நாளில் (15.2.1969–இல்) சென்னை வடதிருமுல்லைவாயில் வைஷ்ணவி ஆலயத்தில், தன் தாயார், தந்தை வழிப் பெரிய தாயார் ஆகியோருடன் தானும் துறவறம் ஏற்றார். வைஷ்ணவி ஆலயத்தில் மூவரும் தங்கி இருந்தனர்.

தாயார் ஸந்யாஸிநி மோநாம்பா அம்மையார் 27.11.1979–இல் ஸித்தி அடைந்தார்கள். அவரது புநித உடல் நங்கைநல்லூரில் ஸமாதி செய்யப்பெற்றது. இந்த ஸமாதியின் மேல் பொங்கி மோநாம்பிகைத் தேவியின் உருவம் ப்ரதிஷ்டை செய்யப் பெற்றது. 9.9.1993–இல் ஸந்யாஸிநி ஞாநம்மாள் ஸித்தி அடைந்தார்கள். அவர்களின் புண்ய சரீரம் ஸந்யாஸிநி மோநாம்பா அம்மையாரின் ஸமாதிக்குக் கிழக்கில் அடக்கம் செய்யப் பெற்றது. இச் சமாதியின்மேல் ஞாநகணேச கிரிநாதரின் உருவம் திகழ்கின்றது.

10.3.2000–இல் ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் போரூர்க் குமரன் திருவடியில் கூடினர். அவர்தம் அருட்சரீரம் பூர்வாச்ரமத் தாயாரின் ஸமாதிக்கு மேற்கில் நல்லடக்கம் செய்யப் பெற்றது. இதன்மேல் ஸச்சிதாநந்த தண்டபாணியின் திருவுருவம் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது. பொங்கி மோநாம்பிகை குடிகொண்ட கோயில் ஆதலின் பொங்கி மடாலயம் என்ற பெயருடன் இத் தலம் விளங்கி வருகின்றது. ஆண்டு தோறும் இம்மடத்தில் கார்த்திகை மாதச் சுக்ல பக்ஷ தசமி முதல் பௌர்ணமி வரை ஆறு நாட்களிலும் இன்னிசைகள், சொற்பொழிவுகள், அந்நதாநங்களுடன் விழாக்கள் நடைபெற்று வருகின்றன.

# அருட்கவியார் பாடியுள்ள தெய்வங்களும், பிறரும்.

## தெய்வங்கள்

அநுமன்
ஆண்டாள்
இராமர்
இராமலிங்கேச்வரர்
இலக்குமி
ஐயப்பன்
ஐயனார்
க்ருஷ்ணர்
கணபதி
கன்னிகா பரமேச்வரி
கலியுக நாச்சியம்மை
காளிகாதேவி
குருவாயூரப்பன்
சரசுவதி
சித்ரகுப்தர்
சிவகாமியம்மை
சிவபெருமான்
சௌடாம்பிகை
திருமால்
திரௌபதி அம்மன்
நடராஜர்
நரசிம்மர்
நவக்கிரகங்கள்
பார்வதி
பொன்னியம்மை
முத்துமாரியம்மை
முருகவேள்
ராதை

## பண்டைப் பெரியோர்

அகத்தியர்
அருணகிரிநாதர்
ஆதிசங்கரர்
கஞ்சமலைச் சித்தர்
கருவூர்த்தேவர்
சிவஞாந முனிவர்
சுந்தரமூர்த்தி சுவாமிகள்
சேக்கிழார்
திருஞாநசம்பந்த சுவாமிகள்
திருநாவுக்கரசு சுவாமிகள்
திருவள்ளுவர்
மாணிக்கவாசக சுவாமிகள்
மெய்கண்டார்

வலம்புரிச்சங்கு

## மகான்கள்

அருட்சக்தி அன்னை
இரெட்டியப்பட்டி சுவாமிகள்
ஒற்றைவேட்டி சுவாமிகள்
காமகோடிபீடம் சந்த்ரசேகரேந்த்ர சரசுவதி சுவாமிகள் & ஜயேந்த்ர சரசுவதி சுவாமிகள்
சட்டி ஸ்வாமிகள் (மாணிக்க சுவாமிகள்)
சாயிபாபா (ஷிரடி)
சிவானந்த சுவாமிகள் (ரிஷிகேசம்)
சுப்பையா சுவாமிகள் (திண்டுக்கல்)
சுப்பையா சுவாமிகள் (திருக்கழுக்குன்றம்)
சுரைக்காய் சுவாமிகள்
சேஷாத்திரி சுவாமிகள்
ரமண மகரிஷிகள்
வள்ளிமலைத் திருப்புகழ் சச்சிதாநந்த சுவாமிகள்
விலட்சணானந்த சுவாமிகள்



# ஸ்ரீலஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள்




(வேல்மாலைத் தொகுத்தருளியவர்)





வடதிருமுல்லைவாயில் ஸ்ரீ வைஷ்ணவி ஆலய ஸ்தாபகர்,
வேல் மாறல் மன்றத்தின் நிறுவுநர், முதல் தலைவர்

**தவத்திரு அண்வாநந்த ஸ்வாமிகள்**

(ஸ்ரீ ஸாது பார்த்தஸாரதி அவர்கள்)

தோற்றம்: 9.4.1901 ஸித்தி: 12.6.1983

வேல்மாறல் யந்த்ரச் சக்ரத்தை 1976 இல் வடிவமைத்தவர்
வேல் மாறல் மஹாமந்த்ர உரையாசிரியர்

**அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்**

ஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸ்வாமிகளின் சீடர்

தோற்றம்: 3.2.1937 ஸித்தி: 10.3.2007